தமிழ்
மரபு
அறக்கட்டளை
பன்னாட்டு
அமைப்பு

# திணை

Bulletin of Tamil Heritage Foundation *international* - THFi



ஏப்ரல் - ஜூன் 2023 இதழ் 33

தமிழ் மரபு அறக்கட்டளை

பன்னாட்டு அமைப்பின்

# திணை காலாண்டிதழ் — 33

ஏப்ரல் - ஜூன் 2023 இதழ்


ஆசிரியர் : முனைவர் க. சுபாஷிணி

பொறுப்பாசிரியர் : முனைவர் தேமொழி

இணை பொறுப்பாசிரியர் : குமரன் சுப்ரமணியன்

# உள்ளடக்கம்

*நூலட்டையில்: மே 14, 2023 அன்று பௌத்தர்கள் சங்கப் பேரவையின் பௌத்த எழுச்சி மாநாட்டில் நாடாளுமன்ற உறுப்பினர் மாண்புமிகு டாக்டர் தொல்.திருமாவளவன் அவர்களால் தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகத்தின் "தமிழகத்தில் பௌத்தம்" நூல் வெளியிடப்பட்டது. படம் உதவி: தமிழ்நாடு பௌத்தர்கள் சங்க பேரவை*



~.~.~.~.~.~

குறிப்பு:

தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் பதிப்பகப் பிரிவின் வெளியீடு இது. இந்த நூல் தமிழ் ஆய்வுப்புலத்தின் தேவை கருதி அனைவருக்கும் இலவசமாக வழங்கப்படுகிறது. இந்நூலை மறுபதிப்பு செய்ய விரும்புவோர் அல்லது ஏதாவது ஒரு வகையில் தங்கள் படைப்புகளில் பயன்படுத்த விரும்புவோர் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பினைத் தொடர்பு கொண்டு அனுமதி பெற்று உசாத்துணைகளை வழங்கி மீள்பதிப்பு செய்யலாம்.

- தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் பதிப்பகப் பிரிவு

https://tamilheritage.org/

# தலையங்கம்

— *முனைவர் க. சுபாஷிணி*



வணக்கம்.

நமது உலகம் வரலாற்றால் கட்டமைக்கப்பட்டுள்ளது. கடந்த கால நிகழ்வுகளின் புரிதல் நிகழ்காலத்தைப் பற்றிய புதிய கண்ணோட்டங்களை நமக்கு வழங்குகிறது. வரலாற்றைப் படிப்பதும், தெரிந்து கொள்வதும், நாம் வாழும் சூழலையும், சமூகங்கள் தொடர்பான பார்வையையும், இவ்வுலகில் நடந்த மாற்றங்களையும். வளர்ச்சியையும் மேம்பாடுகளையும் புரிந்து கொள்ள மனிதக்குலத்திற்குத் தேவைப்படுகின்றது.

ஒவ்வொரு நாளும் உலக நாடுகளின் ஏதோ ஓர் இடத்தில் வரலாற்றின் பண்டைய சுவடுகள் கண்டுபிடிக்கப்பட்டுக் கொண்டேயிருக்கின்றன. அவை மனிதக் குலத்தின் நம்பிக்கைச் சார்ந்த கருத்துகளை மையப்படுத்தியதாகவோ, ஈமக்கிரியைச் சார்ந்த சின்னங்களாகவோ, போர் வெற்றியை வெளிப்படுத்துவதாகவோ, இயற்கை பேரழிவை வெளிப்படுத்துவதாகவோ என பல கோணங்களில் அமைகின்றது.

வரலாற்று ஆய்வுகளோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பது அகழாய்வுகள் எனலாம். அகழாய்வுகள் புதிய கண்டுபிடிப்புகளை ஆய்வுலகத்திற்கு வழங்குவதன் வழி வரலாற்றின் விடுபட்ட புள்ளிகளைக் கண்டுபிடிக்க வரலாற்றாய்வாளர்களுக்கு உதவுகின்றன. மரபணு ஆய்வுகள் என்பது கடந்த சில பத்தாண்டுகளில் உலகளாவிய அளவில் பெரும் வளர்ச்சி கண்டுவரும் ஓர் ஆய்வாகத் திகழ்கின்றது. மனித இனம் என்பது ஹோமோ சேப்பியன்கள் மட்டுமல்ல ... மாறாக ஹோமோ இரெக்டஸ், நியாண்டெர்தால், ஹைடெல்பெர்கென்சிஸ், ஸ்டைம்ஹைம்னிஸ் இன்னும் பல என விரிவாகிக் கொண்டே வருகின்றது. புதிய மனித இனங்களும் இந்த உலகில் வாழ்ந்து மறைந்து போயிருக்கின்றன என்பதையும் மரபணு ஆய்வுகள் ஆச்சரியப்படும் வகையில் நமக்கு வெளிப்படுத்துகின்றன.

வரலாற்று ஆய்வுகளைப் பற்றிய விழிப்புணர்வை வழங்க வேண்டும், முறையாக ஆய்வுகள் நிகழ்த்தப்பட வேண்டும் எனத் தொடர்ந்து செயல்பட்டு வரும் ஒரு உலகளாவிய நிறுவனமாகத் திகழ்கிறது தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு. அந்த வகையில், இவ்வாண்டு மரபணு ஆய்வுகள் தொடர்பான கண்டுபிடிப்புக்களை ஆய்வு மாணவர்கள், பொதுமக்கள் என் பலருக்கும் கொண்டு சேர்க்க வேண்டும் என்ற முனைப்போடு தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு மதுரையில் ஓர் ஆய்வுக் கருத்தரங்கை இவ்வாண்டு ஏப்ரல் மாத இறுதியில் ஏற்பாடு செய்திருந்தோம். இந்த நிகழ்ச்சி குறிப்பிடத்தக்க வரவேற்பைப்

பெற்றது. இந்த நிகழ்ச்சியின் வெற்றி பொதுமக்களுக்கு வரலாற்றை முறையாக அறிந்து கொள்ள ஆர்வம் உள்ளது என்பதை வெளிப்படும் வகையில் அமைந்தது. அதன் அடிப்படையில் வருகின்ற காலங்களில் மேலும் விரிவாக இத்தகைய கருத்தரங்கங்களை ஏற்பாடு செய்து நிகழ்த்த தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு ஆர்வத்துடன் உள்ளோம் என்பதால் இணைந்து செயல்பட ஆர்வம் உள்ள அமைப்புகளோ கல்லூரிகளோ பல்கலைக்கழகங்களோ தமிழ் மரபு அறக்கட்டளையைத் தொடர்பு கொள்ளலாம்.

மேலும், மதுரையில் தமிழ் மரபு அறக்கட்டளை செயல்பாடுகளை விரிவாக்கும் வகையில் இவ்வாண்டு மதுரைக் கிளை உருவாக்கப்பட்டுள்ளது. பள்ளிகள், கல்லூரிகள் சார்ந்த செயல்பாடுகள், மதுரை மற்றும் அதன் அருகாமை பகுதிகளில் வரலாற்றுப் பயணங்களை மேற்கொள்ளும் வகையில் இக்குழுவின் செயல்பாடுகள் அமையும்.

தமிழ்நாட்டிற்கு வெளியே இலங்கை யாழ்ப்பாணத்தில் உள்ள யாழ்ப்பாணம் பல்கலைக்கழக வரலாற்றுத் துறையில் தமிழ் மரபு அறக்கட்டளையின் கிளை ஒன்று 2018ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. இதன் நடவடிக்கைகள் கடந்த சில ஆண்டுகள் முடங்கிக்கிடந்த நிலையில் அதனை மீண்டும் செயல்படுத்தும் வகையிலான நடவடிக்கைகள் அண்மையில் தொடங்கப்பட்டன என்பதை அறிவிப்பதில் மகிழ்ச்சி கொள்கின்றோம்.

ஜெர்மனியின் பாடன் ஊர்ட்டெம்பெர்க் மாநிலத்தில் உள்ள லிண்டன் அருங்காட்சியகத்தில் கடந்த ஆண்டு அக்டோபர் தொடங்கப்பட்ட 'அகம் புறம்' கண்காட்சி மே மாதம் 7ஆம் தேதி நிறைவு பெற்றது. உலகளாவிய அளவில் தமிழின் சங்ககாலப் பெருமைகளைப் பறைசாற்றும் வகையில் ஏற்பாடு செய்யப்பட்ட இந்த நிகழ்வில் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு முக்கிய பங்கு வகித்தது என்பது குறிப்பிடத்தக்கது.

இப்படி பல்வேறு வகையில் வரலாற்று ஆர்வலர்களுக்கும் தமிழ் ஆய்வாளர்களுக்கும் பயனளிக்கும் பல செயல்பாடுகளையும் நிகழ்ச்சிகளையும் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு தொடர்ந்து செயல்படுத்தி வருகின்றோம். தமிழ் மரபு அறக்கட்டளை முன்னெடுக்கும் வரலாற்றுப் பாதுகாப்பு மற்றும் விழிப்புணர்வு நடவடிக்கைகளில் இணைந்து கொள்ளுங்கள். உங்களை அன்புடன் வரவேற்கின்றது தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு.

தமிழால் இணைவோம்!

அன்புடன்
முனைவர் க சுபாஷினி
தலைவர் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு

# மலையும் தமிழும்! — சங்க இலக்கியக் கருத்தியல்கள்

*— ஆர்.பாலகிருஷ்ணன்*



தமிழ் "பிறந்தநாள்" தெரியவில்லை! ஆனால், தமிழ் "பிறந்த இடம்" தெரியும்! அது மலையும் மலை சார்ந்த இடமும். அது "பாற்கடல்" அல்ல, பன்மலை அடுக்கம்! தமிழின் வேர்களில் பூத்திருக்கிறது குறிஞ்சி. ஏனெனில், மலை நிலம் சேயோனாகிய முருகனின் தாய்மடி!

"சேயோன் மேய மைவரை உலகம்" என்கிறது தொல்காப்பியம் (அகத். 5).

அதனால் தான்;

"முருகு அமர் மா மலை" (ஐங். 308)

"விண்பொரு நெடுவரை குறிஞ்சி கிழவ" (திரு. 267)

"பழம் முதிர் சோலை மலை கிழவோன்" (திரு. 317)

"மலைமகள் மகனே" (திரு. 257)

என்று சங்க இலக்கியம் மலைக்கடவுள் முருகனைப் போற்றுகிறது.

குறுந்தொகையின் முதல் பாட்டே முருகனின் குன்றத்தை குறிப்பிடுகிறது.

"கழல் தொடி சேஎய் குன்றம்" (குறி. 1)

"மலை உறை கடவுளே" தமிழ் நம்பிக்கை மரபின் ஆதிவேர்களின் ஆணிவேர்!

சங்க இலக்கியங்களில் "மலை" என்ற சொல் 376 முறை பயன்படுத்தப்படுகிறது.

மலையின் (8)

மலையினும் (2)

மலையும் (7)

மலையே (2)

மலையுள் (1)

ஆகிய சொல்லாக்கங்களையும் சேர்த்து 396.

மலையன் என்ற மலைக்குடி முன்னோன் பற்றி சங்க இலக்கியம் மிகப்பெருமையாகப் பேசுகிறது (நற்.77, நற்.100, குறு.198, குறு. 312, புறம் 124, 125)

குன்று (80)

குன்றம் (53)

குன்றே (20)

என்ற பயன்பாடும் முக்கியமானது.

குன்றில் வாழ்பவர் 'குறிஞ்சி குன்றவர்" (பரி. 9)

வெற்பு, கோடு, வரை, பொறை போன்ற சொற்களும் ஆளப்படுகின்றன. "வெற்பில் வசிப்பவன் வெற்பன்."

"மலை கெழு வெற்பன்" (குறு. 374)

"வான் தோய் வெற்பன்" (குறு. 357)

"கோடு உயர் வெற்பன்" (அகம் 358)

. . . தமிழின் மலைப்பெருமிதம்!

வையை ஆற்றைப் போற்றுவது நோக்கம். தமிழ் கரைபுரளாத வையையா? பாண்டியர் மரபைக் குறிப்பிடாமல் தமிழையும் வையையும் கொண்டாட முடியுமா?

"தெரிமாண் தமிழ் மும்மை தென்னம் பொருப்பன்" என்பது பரிபாடல் (பரி. 26)

அதாவது, ஆய்ந்து தெரிந்த மாண்பிற்குரிய முத்தமிழையும் கொண்ட தெற்குமலைக்காரன்! அதாவது, பொதிகை மலைக்கு உரிய பாண்டியன்!

"திருந்து இலை நெடுவேல் தென்னவன் பொதியில்" என்று பாண்டியனையும் பொதிகையையும் பேசும் அகநானூறு (23) அதே பாடலில், முருகனுக்கு வெறியாட்டு செய்யும் மரபு பற்றியும் குறிப்பிடுகிறது.

மலை -தமிழ் - முருகன் என்ற முப்பரிமாணம்!

மலையில் தோன்றி
தரையில் நடந்து
கடல்களைக் கடந்த
எங்கள் இருப்பின் இருப்பே!

"மலையவும் கடலவும் மாண் பயன் தரூஉம்"
(பெரும். 67)
"மலையவும் நிலத்தவும் சினையவும் சுனையவும்"
(குறி. 113)
"மலையவும் கடலவும் பண்ணியம் பகுக்கும்"
(பதி. 59)
"மலையவும் நிலத்தவும் அருப்பம் வெளவி" (பதி. 90)

அடடா தமிழே! மலையை, நிலத்தை, கடலை நேர்கோட்டில் நின்றளந்த பட்டறிவுக் களஞ்சியமே

துணைக்கண்டம் முழுதறிந்த ஒற்றைச் செம்மொழியே! வரலாறு நடந்த வழித்தடமே!
வாழ்க நீ!

மலை என்பது ஒரு மாபெரும் மெய்! நிறைவால் நிரம்பிய நிறைவழகு!

"உயர்ந்து ஓங்கு பெரு மலை" (மலை. 41)

என்பது மலைகளின் நீள அகல உயரங்களை ஓரடியில் அளக்க முயலும் அடர்சொல்லாக்கம்! !

"மல்" எனில் வளம், வலிமை, பெருக்கல் .

"மல்குதல்" எனில் செழித்தல், நிறைதல்.

"மலிவு" என்பது மிகுதி, நிறைவு, காதல் மகிழ்ச்சி.

"மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்" (தொல்.பொருள்.செய்யுளியல் 187)

"மலை" எனில் மலை! அதாவது மிகுதி, மலைநிலம் என்பது . . .
களவுக்காதல் பூக்கும் பெருவெளி.
தமிழ் எனில் அகம்!
அகம் எனில் காதல்!
அதனால் மலை காதலும் தமிழும் கைகுலுக்கும் இடம்!

அடுக்கு அடுக்காக இருக்கும் மலைகளின் தொகுதி அடுக்கம்.

"அகல் மலை அடுக்கத்த" (கலி. 45)

"நீடு வரை அடுக்கத்த" (பதி. 55)

குரங்குகள் கூட ஏறி அறியாத மரங்கள் கொண்ட மலைத்தொடர் (திரு . 42) என்பது வெப்பமண்டல பல்லடுக்கு மழைக்காடுகளின் (Tropical Rainforests) உயரடுக்கு பற்றிய உச்சகட்டப் புரிதல்!

"மந்தியும் அறியா மரன் பயில் அடுக்கத்து"
(திரு. 42)

அது சரி! மலைகள் அடுத்து அடுத்து கூட்டம் கூட்டமாக இருந்தால் என்ன சொல்வது? அதை "குழு மலை" என்று கூறுகிறது குறிஞ்சிப்பாட்டு.

"வழுவின் வழாஅ விழுமம் அவர்
குழு மலை விடர் அகம்" (குறிஞ். 259-260)

குழு மலை விடர் அகம்! அடடா தமிழே!

யவனர்கள் செலுத்தி வந்த பெரிய கப்பல்கள் முசிறி என்னும் துறைமுகப் பட்டினத்திற்கு பொன்னுடன் வந்து மிளகு மூடைகளோடு திரும்பிச் சென்றன என்ற சங்க இலக்கியப்பதிவு மெய்யா? மிகையா? (அகம். 149).

இதோ, சங்க இலக்கியத்தில் அகச்சான்றுகள்:

வீட்டில் மிளகு மூடைகள்:

"மனை கவைஇய கறி மூடை" (புறம். 343)

வண்டியில் வந்த மிளகு மூடைகள்:

"காலின் வந்த கரும்கறி மூடையும்" (பட். 186)

மலைகளில் வளர்ந்த மிளகுக் கொடிகள்:

"கறி வளர் அடுக்கத்து." ( நற்.151, குறு. 90, குறு. 288, புறம் 168)

"கறி வளர் சிலம்பில்" (கலி. 52);

"கறி வளர் சிலம்பின்" (ஐங். 243).

யாரும் கேட்கிறார்களா இல்லையோ; யாரும் பறிக்கிறார்களா இல்லையோ; தன்னியல்பாய்த் தருகிறது இயற்கை!

உயிர்களின் தாய்முலைகள்; மலைகள். மலைகளின் பார்வையில் மனிதர்களும் இன்னொரு உயிர்; எவ்வளவு பெரிய கொம்பன் ஆனாலும்!

மலைசார்ந்த இனக்குடிச் சமுதாயம், "காடு கொன்று நாடாக்கி குளம் தொட்டு வளம் பெருக்கிய" மருதம் சார்ந்த வேந்துருவாக்கம் ஆகிய இரண்டு சமூகப் பண்பாட்டு அரசியல் நிலைகளுக்கு இடையிலான முரண்களுக்கு சாட்சியமான 'ஆடுகளம்' பாரியின் பறம்பு!

"குடி முறை பகுக்கும்" (நற். 336)

"பகிர்தல் அறத்தை" கற்றுத் தந்ததே "நெடு மலை" தான்! மலை - இயற்கையின் பள்ளிக்கூடம். வாருங்கள் தமிழில் மலைகளை வாசிக்கலாம்!

"அளிதோ தானே பாரியது பறம்பே" (புறம். 100)

"அளி" என்றால் அன்பு! அருள்! அளித்தல் என்பது கொடுத்தல்! மலைகள் கொடுப்பவை! "பாரியின் பறம்பு" என்பது கூடுதல் காரணம்!

பறம்பில் உழவர் உழாமலேயே கிட்டும் நான்கு பயன்கள் உண்டு.

1. மூங்கில் நெல்,
2. பலாப் பழம்,
3. வள்ளிக் கிழங்கு,
4. மலைத் தேன்.

"உழவர் உழாதன நான்கு பயன் உடைத்தே
ஒன்றே சிறியிலை வெதிரின் நெல் விளையும்மே.
இரண்டே தீம் சுளை பலவின் பழம் ஊழ்க்கும்மே.
மூன்றே கொழும் கொடி வள்ளி கிழங்கு வீழ்க்கும்மே

நான்கே....குன்றம் தேன் சொரியும்மே"
பறம்பு மலையை "பலவு உறு குன்றம்"
(நற். 253) என்று புகழ்கிறார் கபிலர்.
பறம்பு மலை - பலா மலை! இனிப்பானது!

பலா நிரம்பிய மலை அது.
"பலா அமல் அடுக்கம்" (அகம். 8).
ஆண் கருங்குரங்கு,"நோண்டித்" தின்ற பலாப்பழம் "காயம்" மிகுந்து கசிவதால் மலை முழுவதும் திசைதோறும் மணம் கமழ்கிறது!

"கலை தொடு பெரும் பழம் புண் கூர்ந்து ஊறலின்
மலை முழுதும் கமழும் மாதிரம் தோறும்"
(மலை. 293)

பலாப் பழம் மரத்தில் பழுத்து வெடித்தது. அதிலிருந்து ஒழுகும் கள் போன்ற சாற்றின் மணத்தை வாடைக்காற்று அந்த வெளியெல்லாம் பரப்பியது!

"பலாஅம் பழுத்த பசும் புண் அரியல்
வாடை தூக்கும்" (பதி. 61)

குரங்கு கிழித்துப் போட்ட பலாப்பழம் குறவர்களின் பசிக்கு உணவாகிறது!

"கலை உண கிழித்த முழவு மருள் பெரும்
பழம் சிலை கெழு குறவர்க்கு அல்கு
மிசைவு ஆகும்" (புறம். 337)

மலையெல்லாம் பலா.
"பல் கோள் பலவின் பயிர்ப்பு உறும் தீங்கனி"
(கலி. 50)
"செம் கால் பலவின் தீம்பழம்" (நற். 235)
"கொழும் சுளை பலவின்" (நற். 326)
"வேர் கோள் பலா" (குறு. 18)
"சாரல் பலவின் சுளை" (அகம். 2)

"ஆய் சுளை பலவின்" (அகம். 7)
"தீம் பழ பலவின் சுளை" (அகம். 182)

வேரிலும், அடிமரத்திலும், வளைந்த கிளைகளிலும் ஒரே வரிசையில் தொடுத்து வைத்தது போல தொங்கித் தொடர்ந்து கீழே தாழ்ந்தது போன்ற தணிந்த குலைகளைக் கொண்ட பலா மரங்கள். (குறுந் 257)

"வேரும் முதலும் கோடும் ஒராங்குத் தொடுத்த
போலத் தூங்குபு தொடரிக் கீழ் தாழ்வு
அன்ன வீழ் கோட் பலவின்"
(குறுந் 257).

மரத்தின் பெருமை உயரம் மட்டுமா? இல்லை என்கிறது சங்க இலக்கியம். பூவாமல் காய்க்கும் மெல்லிய கிளைகளைக் கொண்ட உயர்மரங்கள் இருந்தாலும் பலா மரத்தின் பெருமையை அதன் பழம் தான் வெகுதூரத்திற்கு, உயரத்திற்கு பரப்புகிறது.

"கொழுமென் சினைய கோளியுள்ளும்
பழம் மீக்கூறும் பலாஅப் போல"
(பெரும். 407- 408)

பலாப் பழம் பார்க்க 'முழவு' என்ற தாள இசைக்கருவி போல இருக்கிறது. (அகம் 172, மலை.511).

குடம் போலத் தோன்றும் பலாப் பழத்தை வீட்டுப் பக்கம் வந்த கருவிரல் மந்திக்கு விருந்தாகப் படைக்கிறாள் மலைக்குறவரின் காதல் மகள்.

கிளை தோறும் பலா "தூங்குகிறது" (நற். 77, குறு. 83). பலா மரங்கள் ஊரின் அழகு மிக்க செல்வங்களில் ஒன்றாக கருதப்பட்டது.

"இன் தீம் பலவின் ஏர் கெழு செல்வத்து" (அகம். 282)

இதோ ஒரு காட்சி...

அருவி நீரில் குதித்த கரிய விரலையுடைய பெண் குரங்கு செழுமையான காய்ப்பினையுடைய பலாவின் பழத்தையே தெப்பமாகக் கொண்டு மலைச்சரிவில் உள்ள பெரிய ஊரின் நீர்த்துறையில் வந்து இறங்கியது!

"அருவி பாய்ந்த கருவிரல் மந்தி செழும் கோள்
பலவின் பழம் புணை ஆக சாரல் பேர்
ஊர் முன்துறை இழி தரும்" (அகம். 382).

"மலை வாழ்வியல்" எளிதானது அல்ல!

"யானை தன்னைத் தாக்க வந்தாலும், பாம்பு தன் மேல் ஊர்ந்து சென்றாலும், நீலநிற வானம் மேகம் கருத்து மின்னல் வெட்டி பயங்கரமாக இடி இடித்தாலும், அதற்காக மலைநிலத்து கர்ப்பிணிப் பெண் கூட அஞ்சி நடுங்க மாட்டாள்" என்பது மலை வாழ்வியலுக்கு தேவையான நெஞ்சுரம், உடல்திறம் பற்றிய ஆகச் சிறந்த சித்தரிப்பு!

"யானை தாக்கினும் அரவுமேல் செலினும்
நீல்நிற விசும்பின் வல்ஏறு சிலைப்பினும்
சூல்மகள் மாறா மறம் பூண் வாழ்க்கை"
(பெரும்பாண். 134 - 136)

ஏனெனில், வலிமையால் தேடிய கூட்டாஞ்சோறு உண்ணும் வாள் குடி அது!

"வலி கூட்டுணவின் வாள் குடி!" (பெரும். 137)

வேட்டையாடுதலே ஒரு 'கூட்டு முயற்சி' தானே.

வாயை வைத்துப் பிழைக்கக்கூடிய "வணிகச் சந்தை" அல்ல குறிஞ்சி நிலம். அங்கே தேவை வில் பழகிய தோள் வலிமை.

"சிலை நவில் எறுழ் தோள்" ( பெரும். 145)

கொண்டவர்கள் மலைநிலத்தவர். வேட்டையாடி வீழ்த்திய ஆண் முள்ளம்பன்றியோடு தனது சிறுகுடிக்குத் திரும்பும் கானவனின் முகமெல்லாம் மகிழ்ச்சி. அவன் வேட்டைக்கறியோடு திரும்பியதும் வீட்டிலுள்ள வளர்ப்பு நாய்களும் குதியாட்டம் போடுகின்றன.

"வன் கை கானவன் வெம் சிலை வணக்கி
உளம் மிசை தவிர்த்த முளவுமான் ஏற்றையொடு
மனை வாய் ஞமலி ஒருங்கு புடை ஆட வேட்டுவலம்
படுத்த உவகையன் காட்ட"
(நற். 285)

மலைசார்ந்த வன்புலம் தான் வேளாண்மை பிறந்த இடம்!

"மலை இடம்படுத்து கோட்டிய கொல்லை
தளிபதம் பெற்ற கான் உழு குறவர்
சில வித்து இட்டு என பல விளைந்து
இறங்கு குரல் பிறங்கிய ஏனல்" (நற். 209)

மலையிடத்தை சமமாக்கி ஆக்கிய கொல்லையில் மழையால் ஈரப்பதம் பெற்ற வன்புலத்தை உழும் குறவர் அங்கொன்றும் இங்கொன்றுமாக தூவி விதைத்த தினை பலபடியாக விளைந்து கதிர் சாய்ந்து நிற்கும் தினைப்புனம். (நற். 209).

"புன்புல மயக்கத்து விளைந்தன தினையே"
(ஐங். 260)

"தனை விளை சாரல்" (மது. 291)
"அடுக்கல் பைம் தினை" (நற். 22)
"ஓங்கு தினை பெரும் புனத்து" (அகம். 102)

காலில் செருப்பைத் தொடுத்துக் கட்டிய கானவன், மரங்கள் செடிகொடிகளைச் சுட்டெரித்துச் சமப்படுத்திய புன்நிலத்தில் கரிந்து போன இடங்களை கழுவிவிட்ட மழையினால் உண்டான ஈரத்தில் விதைத்த தினைப்பயிரின் நீண்ட கதிர்களை காவல் காக்கும் மகளிர் ஊஞ்சல் கட்டி ஆட வசதியாக வேங்கை மரத்தின் அகன்ற கிளைகளின் அசைகின்ற கொம்புகளை வெட்டினான். (அகம். 368)

"தொடு தோல் கானவன் சூடு உறு வியன்
புனம் கரி புறம் கழீஇய பெரும் பாட்டு ஈரத்து
தோடு வளர் பைம் தினை நீடு குரல் காக்கும்
ஒண்தொடி மகளிர்க்கு ஊசல் ஆக
ஆடு சினை ஒழித்த கோடு இணர் கஞலிய
குறும்பொறை அயலது நெடும் தாள் வேங்கை"
(அகம். 368)

காலில் தோல் செருப்பு அணிந்த கானவன்!
தினைப்புனம் காக்கும் மகளிர்!
வேங்கை மரத்தில் ஊஞ்சல்!
அடடா தமிழே! இது கவிதையா குறும்படமா!

மரங்கள் செடிகளுக்கு தீ வைத்து எரித்து விளைநிலமாக்கி தினை, வரகு போன்ற தானியங்களைப் பயிரிடுவது "slash and burn agriculture" என்று அழைக்கப்படுகிறது. சுழற்சி முறையில் செய்யப்படும் இந்த வேளாண்மைக்கு "Shifting

Cultivation" என்றும் பெயர் உண்டு. இந்தியாவின் வடகிழக்கு மாநிலங்களில் "Jhum Cultivation" என்றும்; ஆந்திரப் பிரதேசம், தெலுங்கானா மற்றும் ஒடிசாவின் சில பழங்குடிப்பகுதிகளில் "Podu Cultivation" என்றும் அழைக்கப்படுகிறது.

இத்தகைய வேளாண்மை பற்றிய ஒரே ஒரு செவ்வியல் ஆவணப்பதிவு இந்தியத் துணைக்கண்டத்தில் சங்க இலக்கியத்தைத் தவிர வேறொன்றும் இல்லை! சங்க இலக்கியம் மானுடவியலின் தவிர்க்கமுடியாத ஆவணம்!

"அன்பொடு புணர்ந்த ஐந்திணை" என்பது தொல்காப்பிய களவியலின் முதல் நூற்பாவின் இரண்டாம் வரி. ஆனால் அது தான் அகத்தமிழ் மரபின் முகவரி. "புணர்தல்" குறிஞ்சியின் உரிப்பொருள். அவ்வாறாயின் மலைசார்ந்த "குறிஞ்சி" தானே "அன்பொடு புணர்ந்த" அகத்திணையின் அடித்தளம்.

தெய்வம், உணவுப்பயிர், விலங்குகள், பறவைகள், பறை, யாழ் உள்ளிட்ட கருப்பொருள்கள் திணைக்குரிய அகப்பண்பை, உணர்வை கவித்துவமாய் மேம்படுத்தும் பின்புலம் ( Backdrop and Propups) மற்றும் பின்னணி இசை (Background Music) போன்றவை. இவை இசைந்தியங்கும் படைப்பியலே அக இலக்கியம்!

கருப்பொருள்கள் உரிப்பொருளுக்கு உரமூட்டும் இலக்கிய நுட்பம்!

காமத்தின் இயல்பிற்கு ஒரு "யானை விளக்கம்" தருகிறது குறுந்தொகை!
"நீ காதலில் விழலாமா" எனக்கேட்ட தோழனுக்கு பதில் சொல்கிறான் தலைவன்.

"காமம் காமம் என்ப காமம்
அணங்கும் பிணியும் அன்றே நுணங்கிக்
கடுத்தலும் தணிதலும் இன்றே யானை
குளகு மென்று ஆள் மதம் போலப்
பாணியும் உடைத்தது காணுநர்ப் பெறினே"
(குறுந். 136)

காமம் காமம் என்று கண்டபடி பேசுகிறார்கள். அது "காற்றோ கருப்போ" அல்ல! புதிதாக தோன்றும் பிணியும் அல்ல. அது மிகுவதும் அல்ல குறைவதும் அல்ல! இலை தழைகளைத் தின்னும் யானைக்கு "மதம்" ஏற்படுவது போல மனதிற்கு உகந்தவரைக் கண்டதும் காமம் பொங்குகிறது!

மணம் வீசுகின்ற மூச்சுக்காற்றை உடைய பெண்யானையைத் தழுவி, வளைந்த கையையுடைய ஆண் யானை குன்று சூழ்ந்த சிற்றூர்ப் பக்கம் இறங்கிச் செல்லும் மலைப்பகுதி. (குறுந். 332)

"நாறுயிர் மடப் பிடி தழீஇ தட கை யானை
குன்றக சிறுகுடி இழிதரும்
மன்றம் நண்ணிய மலை" (குறு. 332)

இளமையான பெண் யானையை விரும்பிய, மூங்கில் முளையைப் போல முளைத்தெழும் கொம்புகளையுடைய இளம் களிறு அங்குள்ள குறவர் முழங்கியதால் ஊர்மன்றத்தை போழ்ந்து செல்லும் மலைநாடு. (குறுந். 346)

"நாகு பிடி நயந்த முளை கோட்டு இளம் களிறு
குன்றம் நண்ணி குறவர் ஆர்ப்ப
மன்றம் போழு நாடன்" (குறுந். 346)

குரங்கில் இருந்து மனிதன் பிறந்தானா, அல்லது மனிதர்களில் சிலர் "பரிணாம தளர்ச்சி" அடைந்து குரங்கு ஆனார்களா என்ற "பஞ்சாயத்து" ஒருபுறம் இருக்கட்டும்!

ஐங்குறுநூறு தொகுப்பில் "குரக்குப் பத்து" என்ற தலைப்பில் பத்துப் பாடல்கள் உள்ளன. காதலன், கணவன், தலைவன் போன்ற சொல்லாடல்களை குரங்குகளுக்கும் சங்க இலக்கியம் பயன்படுத்துகிறது.

"மந்திக் காதலன் முறி மேய் கடுவன்" (ஐங். 276)
"மந்திக் கணவன் கல்லாக் கடுவன்" (ஐங். 274)
"குரங்கின் தலைவன் குருமயிர்க் கடுவன்"
(ஐங். 276)

குறிஞ்சித் திணைப்பாடல்கள் காதலைக் கொண்டாடுவதில் வியப்பு எதுவுமில்லை. ஆனால் எப்படிக் கொண்டாடுகிறது என்பது முக்கியம்.

"புத்தேள் நாடு என்றால் வானுலகம்"
(தமிழ்ப் பேரகராதி பக். 2762)

தேவருலகம் அதாவது "சொர்க்கம்"
தேவலோகம் என்றால் அமிர்தம்;
அமிர்தம் என்றால் இனிமை.
அப்புறம் என்ன கேட்கவா வேண்டும் அலப்பறையை!

ஆனால், சங்க இலக்கியம் காதலைக் கொண்டாடும் போக்கில் ஒரு"கொக்கியைப்" போடுகிறது! காதலி,

காதலன் பார்வையில் அந்த "புத்தேள் நாடு" என்ற கருத்தாக்கத்தை உடைத்தெறிகிறது!

தமிழே! நீ உன் பண்பாட்டு அரசியலைப் பேசும் அழகு பேரழகு!

கடல் சூழ்ந்த இந்த உலகம்; பெறுவதற்கு அரிது என்று புகழப்படும் வானுலகம். இந்த இரண்டையும் ஒருபுறமும்;
பூப்போல கண்கள்; பொன் போன்ற மேனி; அழகிய கோடுகள் கொண்ட அல்குல் அழகியான எனது காதலியின் தோள்கள் இரண்டையும் மாறி மாறித் தழுவும் இன்பத்தை மற்றொரு புறமும் வைத்து மதிப்பிட்டால் இவளோடு வாழும் வாழ்க்கையே இனிமையானது!

"விரிதிரைப் பெருங்கடல் வளைஇய உலகமும்
அரிது பெரு சிறப்பின் புத்தேள் நாடும்
இரண்டும் தூக்கின் சீர் சாலாவே
பூப்போல் உண்கண், பொன்போல் மேனி,
மாண் வரி அல்குல், குறுமகள்
தோள் மாறுபடூஉம் வைகலொடு எமக்கே"
(குறுந்தொகை - 101)

தலைவி பேசுகிறாள்!
குரங்குக் கூட்டம் மிளகுக் கொடியின் கொழுந்துகளை தின்னும் மலை நாட்டவன். அவன் இனிமையானவன்! அவனோடு நான் கொண்ட காதலை அறிந்து என் இனத்தவர் என்னைத் தனிமைப்படுத்துகிறார்கள். அது துன்பம் தான்.

ஆனால் எனது இனிய காதலால் நான் படும் இந்தத் துன்பம் கூட இனிமையானதே !

அது சரி! இந்த துன்பமாகிய இன்னாமையை விடவா இனிமையானது இனிது இனிது என்று சொல்லப்படும் வானுலகம்?

"கறிவளர் அடுக்கத்து ஆங்கண், முறி
அருந்து குரங்கு ஒருங்கு இருக்கும்
பெருங்கல் நாடன் இனியன்;
ஆகலின், இனத்தின் இயன்ற
இன்னாமையினும், இனிதோ இனிது
எனப்படூஉம் புத்தேள் நாடே?
(குறுந்தொகை - 288)

காதல் துன்பமே வானுலகை விட இனியது என்றால் காதல் இன்பம்?!

குறுந்தொகை படிக்காமலா கூறியிருப்பார் வள்ளுவர்?

"புலத்தலின் புத்தேள் நாடு உண்டோ நிலத்தொடு
நீரியைந்து அன்னார் அகத்து" (குறள் - 1323)

"தாம்வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு." (குறள் - 1103)

அகம் தமிழின் அகத்தின் முகம்! அறம் பொருள் இன்பம் மூன்றும் தான் முப்பால்! தமிழ் அறிந்த"வீடு" காதல் குடியிருக்கும் வீடு தான்!

குறிஞ்சிக் காதலின் அடிப்படை இயல்பு என்ன? வியப்பால் நிரம்பிய அவளது வினாவில் இருக்கிறது இதற்கான விடை! என் தாய் யாரோ? உன் தாய்

யாரோ? என் தந்தையும் உன் தந்தையும் எந்த முறையில் ஒருவருக்கு ஒருவர் உறவானவர்கள்? எந்த உறவின் வழியாக நானும் நீயும் அறிந்துகொண்டோம்? செம்மண் நிலத்தில் பெய்த மழைநீர் போல
அன்புடைய நம் நெஞ்சம் தாமாக ஒன்றுபட்டனவே! (குறுந்தொகை - 40)

"யாயும் ஞாயும் யாராகியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறை கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே!"
(குறுந்தொகை - 40)

கண்டதும் காதல்! ஆமாம்! கண்களே காதல் பிறக்குமிடம்!

"நாட்டம் இரண்டும் அறிவு உடம்படுத்தற்கு
கூட்டி உரைக்கும் குறிப்புரை ஆகும்!"

என்கிறார் தொல்காப்பியர். "நாட்டம்" என்பது கண் ! (தமிழ்ப்பேரகராதி)

தோழி கேட்கிறாள் தலைவனிடம் !

"காமம் கடவ உள்ளம் இனைப்ப
யாம் வந்து காண்பது ஓர் பருவம் ஆயின்
ஓங்கித் தோன்றும் உயர் வரைக்கு
யாங்கு எனப்படுவது நும் ஊர் தெய்யோ?"
(ஐங்குறுநூறு -237)

காதல் தூண்டிவிட, ஏக்கத்தால் மனசு வருந்த; உன்னை அங்கு வந்து தான் பார்க்க வேண்டும் என்ற சூழ்நிலை ஏற்பட்டால் நாங்கள் எப்படி வருவது! ஓங்கி

மேலெழுந்து தோன்றும் மலைக்கு எந்தப் பக்கமாக இருக்கிறது உனது ஊர்?

"யாயும் ஞாயும் யாராகியரோ" என்ற கேள்வி இலக்கியம் அல்ல! எதார்த்தம்! காதலன் முன்பின் அறியாதவன்; முகவரி தெரியாதவன்! கட்டாயம் அவன் "அத்தை மகனோ மாமன் மகனோ" இல்லவே இல்லை!

தலைவியின் சார்பாக தோழி சொல்கிறாள் தலைவனிடம்!

"அன்னையும் அறிந்தனள்; அலரும் ஆயின்று;
நல் மனை நெடு நகர் புலம்பு கொள உறுதரும்,
இன்னா வாடையும் மலையும்;
நும் ஊர்ச் செல்கம்; எழகமோ? தெய்யோ!"
(ஐங்குறுநூறு - 236)

அன்னைக்கும் தெரிந்து விட்டது! ஊரும் அலர் தூற்றுகிறது. வீட்டில் உள்ளவர் புலம்பித் தீர்க்கிறார்கள்! துன்புறுத்தும் வாடைக் காற்றும் வீசுகிறது. உன் ஊருக்குச் செல்லலாமா? புறப்படலாமா? (ஐங்குறுநூறு - 236).

தயக்கம் அற்ற தமிழ் முயக்கம்!

தலைவி பேசுகிறாள்! நள்ளிரவின் இருட்டெல்லாம் எனக்கு ஒரு பொருட்டல்ல! பாம்பு பற்றி நான் அஞ்சவில்லை! மலைப்பகுதியில் பிரியும் பாதைகளில் அவன் ஊருக்குப் போகும் வழியைச் சொல்ல யாரேனும் கிடைத்தால்... (அகநானூறு - 8)

"தூங்கு தோல் துதிய வள்ளுகிர் கதுவலின்

பாம்பு மதன் அழியும் பானாட் கங்குலும்
அரிய அல்லமன்.....
...விண் தோய் விடர் அகத்து இயம்பும் அவர் நாட்டு
எண்ணரும் பிறங்கல் மான் அதர் மயங்காது....
நெறிகெட விலங்கிய "நீயீர் இச்சுரம் அறிதலும் அறிதிரோ?" என்னுநர்ப் பெரினே!" (அகநானூறு - 8)

தலைவன் அவளுக்கு "சொந்தமோ சுற்றமிமோ" இல்லை! போகும் வழிகூட அவளறியாத தூரத்தில் இருந்து வந்தவன்!

தோழி சொல்கிறாள் தலைவனிடம்!

"ஒல்லென இழிதரும் அருவி நின்
கல்லுடை நாட்டுச் செல்லல் தெய்யோ!"
(ஐங்குறுநூறு - 233)

உன் மலையில் மணிக் கற்களை உருட்டிக்கொண்டு "ஒல்" என்னும் ஓசையுடன் அருவி கொட்டும்! அந்த நாட்டுக்கு நீ உடனே செல்ல வேண்டாம். இவளை மணந்து கையோடு கூட்டிச் செல்!

காதலுக்கும் அரசனின் செங்கோலுக்கும் என்ன தொடர்பு?

தலைவன் பேசுகிறான்.

சுற்றி என்ன நடக்கிறது என்பது தெரியாமலேயே அவளைக் காவல் காத்து வந்தார்கள் அவளது சொந்தக்காரர்கள்! அவர்களுக்குத் தெரியுமா அவளுக்கு கோரைப் புல்லில் பொம்மை செய்து வருவதற்காக நான் பள்ளத்தில் இறங்கி புல் அறுத்தது? அவளது புடைத்து எழும் மார்பகங்களின் மீது நான் "தொய்யில்" எனப்படும் ஓவியம் வரைந்தது செங்கோலுடன் முறையாக ஆட்சி புரியும் அரசனின்

அரசவைக்குச் சென்று இதை எல்லாம் சொல்லி நான் நீதி கேட்டால் என்ன ஆவார்கள் இவர்கள்! பரிதாபத்திற்குரியவர்கள் இந்த ஊர்க்காரர்கள்! (குறுந்தொகை - 276).

"பணை தோள் குறுமகள் பாவை தைஇயும்
பஞ்சாய் பள்ளம் சூழ்ந்தும் மற்று இவள்
உருத்து வனமுலை ஒளிபெற எழுதிய
தொய்யில் காப்போர் அறிதலும் அறியார்
முறை உடை அரசன் செங்கோல் அவையத்து
யான் தன் கடவின் யாங்கு ஆவது கொல்
பெரிதும் பேதை மன்ற
அளிதல் தானே இ அழுங்கல் ஊரே!"
(குறுந்தொகை - 276)

தலைவன் சொல்கிறான் தோழியிடம்!
செங்கோலையுடைய குட்டுவனின் தொண்டி நகரைப் போன்று அழகானவள் என் உள்ளம் கவர்ந்தவள். என் நிலைமையை அறிந்த நீ மனசு வைக்காவிட்டால் அவளது தோள் வனப்பையும், கூந்தல் அழகையும் புகழ்ந்து பாராட்டி வாழ்தல் எப்படி சாத்தியம் ஆகும்?

"எல்லாம் உன் கையில் தான் இருக்கிறது!" (ஐங்குறுநூறு - 178)

"தோளும் கூந்தலும் பல பாராட்டி
வாழ்தல் ஒல்லுமோ மற்றே, செங்கோல்
குட்டுவன் தொண்டி அன்ன
என் கண்டும் நயந்து நீ நல்காக் காலே!"
(ஐங்குறுநூறு - 178)

நியாயம் என்று ஒன்று இருக்கிறது அல்லவா? செங்கோல் அரசன் குட்டுவனின் தொண்டி போல அழகாக இருப்பவள் காதலிப்பவனுக்கு நீதி வழங்க வேண்டும் தானே !!!!

அந்தக் கறுப்பழகி என்னைக் கட்டித் தழுவா விட்டாலும் பரவாயில்லை! அறம் வழுவாத செங்கோலுடன் ஆட்சிபுரியும் பசும்பூண் பாண்டியனின் பொதியில் மலையின் காந்தள் மலரின் மணம் கொண்ட அவளது நெற்றியை நான் நுகராவிட்டாலும் பரவாயில்லை! அவளுடைய நட்பு கெட்டுப்போகக் கூடாது; தொடர்பு விட்டுப் போகக்கூடாது. நான் தூது அனுப்பும் செய்திகள் அவளுக்கு தொடர்ந்து கிடைத்தால் கூட போதும் எனக்கு... (அகநானூறு - 338)

"அறம் கடைப்பிடித்த செங்கோலுடன்...
...பலர்புகழ் திருவின் பசும்பூண்
பாண்டியன் அணங்குடை
உயர்நிலைப் பொருப்பின் கவாஅன்,
சினைஒண் காந்தள் நாறும் நறுநுதல்
துணைஈர் ஓதி மாஅயோள் வயின்..
..முயங்கல் இயையாது ஆயினும்.....
தவாஅலியரே, நட்பே, அவள் வயின்
அறாஅலியரே தூதே...."
(அகநானூறு - 338)

அது சரி! காதலுக்கும் அரசனின் செங்கோலுக்கும் என்ன தொடர்பு? செங்கோல் அரசனிடம் என் காதலைச் சொல்லி முறையிட்டால் என்ன ஆகும் என்று ஏன் கேட்கிறான் ஒரு காதலன்? ஏனெனில்

காதல் என்பதும் ஓர் அறம் தான்! அறம், பொருள், இன்பம் என்பது தான் நாமறிந்த நிரல்வரிசை. ஆனாலும் களவியலில் தொல்காப்பியர்

"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை...." என்று வரிசையை மாற்றுகிறார்!

மானுடத்தை இயக்குவது இன்பத்திற்கான வேட்கை தான். பொருள் தேடுவதும் இன்பத்திற்கான நகர்வு தான். ஆனால் இன்பத்தை, பொருளைத் தேடுவதில் அறம் இருக்கவேண்டும் என்பது தான் தனிமனித, சமூக ஒழுங்கு. அதுவே பொருள்முதல் வாதத்தின் உயர் கட்டுமானம்!

அறத்தொடு நிற்றல்!
தலைவி ஒருவனை காதலிக்கிறாள் என்ற உண்மையை தோழி செவிலிக்கும், செவிலி நற்றாய்க்கும், நற்றாய் தந்தை தனயனுக்கும் நேரடியாகவோ குறிப்புரையாகவோ தெரிவிப்பதற்குப் பெயர் "அறத்தொடு நிற்றல்"!

"அறத்தொடு நிற்கும் காலத்தன்றி அறத்தியல்
மரபிலள் தோழி என்ப" (தொல். பொருள்.12)

எப்போதும் தலைவியுடன் இருக்கும் தோழி "நடந்தது என்ன?" என்பதைத் தெரிவித்தால் தானே இருமணம் ஒன்றிய களவுக்காதல் ஊரறிந்த திருமணத்தில் ஒன்றாகும்! காதலே பருவத்தின் அறம் தான்! அது மணமாய் மலர்வது அந்த அறத்திற்குச் செய்யும் அறம்!

நடந்தது என்ன?
உன் மகள் பால் குடிக்க மறுக்கிறாள்; உடம்பு மெலிந்து விட்டாள் அதற்கு காரணம் என்ன என்று என்னைக் கேட்கிறாய் செவிலித் தாயே! எனக்கும் அது தெளிவாகத் தெரியாது! இருந்தாலும் தெரிந்ததைச் சொல்லுகிறேன். ஒருநாள் மலைச்சாரலில் பூப்பறிக்கச் சென்றிருந்தோம்! புள்ளி புள்ளியாக பூத்திருந்த வேங்கை மரத்தை பார்த்து "புலி, புலி" என்று கூவினோம்! அவன் ஓடிவந்தான். வில் அம்போடு! எங்கே புலி என்றான்! நாங்கள் நாணத்துடன் நின்றோம்! "அழகானவர்களே உங்கள் வாயிலிருந்து பொய்யும் வருமா?" என்று கேட்ட அவன் உன் மகளை திரும்பத் திரும்ப பார்த்துக்கொண்டே சென்றான்! அவன் சென்ற திசையையே பார்த்துக் கொண்டு நின்ற உன் மகள் சொன்னாள். "இவன் தான் ஆண்மகன்"! அவள் அப்படிச் சொன்னதில் "ஏதோ இருக்கிறது" என்பது அறிவுடையோர்க்கு தெரியுமே!

தலைவி தோழியிடம் கேட்கிறாள்! என் தந்தையின் கடுமையான காவலையும் கடந்து நாங்கள் இருவரும் முடிவு செய்த களவு மணம் என்பதை எனது தாயிடம் கூறுவதில் பழி எதுவும் இருக்கிறதா தோழி!

"நெடுந்தேர் எந்தை அருங்கடி நீவி
இருவேம் ஆய்ந்த மன்றல் இதுவென
நாம் அறிவுறாலின் பழியும் உண்டோ?"
(குறிஞ்சிப்பாட்டு: 20-22)

தோழி தெரிவிக்கிறாள்.

"நான் உனது காதல் பற்றி அம்மாவிடம் சொன்னேன். அம்மா நம் அப்பா அண்ணன்மார் ஆகியோரிடம் சொன்னார். அவர்கள் உடனே உணர்ச்சிவசப்பட்டு வீட்டில் இருந்த வில் அம்பு ஆகியவற்றை முறைத்து நோக்கியவாறு ஒரு நாள் முழுவதும் சினத்துடன் இருந்தனர். பின்னர் மனம் தேறி உங்கள் இருவரிடமும் குற்றம் இல்லை என்று உணர்ந்து அமைதி அடைந்தனர்" (கலித்தொகை - 39)

"அறத்தொடு நின்றேனை கண்டு திறப்பிட
என் ஐயர்க்கு உய்த்து உரைத்தாள் யாய்,
அவரும் தெரி கணை நோக்கிச் சிலை
நோக்கிக் கண்சேந்து
ஒரு பகல் எல்லாம் உருத்து எழுந்து ஆறி
இருவர் கண் குற்றமும் இல்லையால்
என்று தெருமந்து சாய்த்தார் தலை"
(கலித்தொகை - 39)

தோழி தலைவியிடம் சொல்கிறாள்! நாம் இவ்வளவு நாளாக மறைத்து வைத்த உனது காதலை நமது தாய் தந்தையிடம் சொல்லிவிட்டேன். உன் காதலனும் முறைப்படி வந்து பெண் கேட்டான். "எது சரியோ அதைத் தான் செய்ய வேண்டும்" என்ற கொள்கை உடைய நமது பெற்றோரும் ஒப்புக்கொண்டனர். பனை மரத்தில் தொங்கும் தூக்கணாங்குருவியின் கூட்டை விடவும் குழப்பத்தில் இருந்த ஊர்க்காரர்களும் இப்போது தெளிவாகிவிட்டார்கள்.

"எந்தையும் யாயும் உணரக் காட்டி
ஒளித்த செய்தி வெளிப்படக் கிளந்த பின்
மலைகெழு வெற்பன் தலைவந்து இரப்ப,

நன்றுபுரி கொள்கையின், ஒன்றாகின்றே,
முடங்கல் இறைய தூக்கணாங்குரீஇ
நீடிரும் பெண்ணைத் தொடுத்த
கூடினும் மயங்கிய மையல் ஊரே"
(குறுந்தொகை - 374)

எல்லாம் நல்லபடியாக முடிந்தது! ஆரிய அரசனுக்கு தமிழ் அறிவிப்பதற்காக பத்துப்பாட்டில் ஒன்றான குறிஞ்சிப்பாட்டை 261 அடிகளில் எழுதிய கபிலர் குறிஞ்சித் திணையை பின்னணியாகக் கொண்டு "அறத்தொடு நிற்றல்" என்ற துறையில் எழுதியுள்ளார். அறத்தொடு நிற்றலின் ஆற்றலை உணர்த்த வேறென்ன வேண்டும் விளக்கம்!

# அன்பின் ஐந்திணை – குறிஞ்சி

— முனைவர் தேமொழி

திணைமாலை நூற்றைம்பது நூலின் குறிஞ்சித் திணைப் பாடல்கள் அனைத்திலும் குறிப்பிடப்படும் தலைவனும் தலைவியும் ஒருவரே என்றோ, அவர்களின் தோழியும் தோழனும், செவிலித்தாயும், நற்றாயும், தந்தையும் தமையன்களும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர் என்றோ, அல்லது அவர்கள் வாழிடம் குறிப்பிட்ட குறிஞ்சி நில ஊர் என்றோ கூறுதலும் இயலாது. இருப்பினும், 31 குறிஞ்சிப்பாடல்களையும் ஒரே தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே நிகழும் காதலாகக் கொண்டு ஒரு வரிசைப்படுத்தி அவற்றிலிருந்து ஒரு கதையும் உருவாக்கலாம். அத்தகைய முயற்சியே இக்கட்டுரை. வரிகளுக்குப் பின்னர் அடைப்புக் குறிகளுக்குள் கொடுக்கப்படும் எண், திணைமாலை நூற்றைம்பது நூலில் உள்ள பாடல்களின் வரிசை எண்.

புணர்தலும் புணர்தல் நிமித்தமுமாகிய ஒழுக்கமும் கொண்ட குறிஞ்சி நிலத்தில், மலைநாட்டில் நிகழ்வது இக்கதை.

தலைவனுக்கு 'வேலன்' என்றும் தலைவிக்கு 'வள்ளி' என்றும் பெயர்கள் சூட்டியும் அழைக்கலாம். தலைவன் கையில் வேலை வைத்துள்ளவன், வேட்டை

ஆடும் வீரன். அவன் ஓர் அழகிய மலைநாட்டிற்குத் தலைவன். அவனுக்கு ஒரு நண்பன். இவர்களைப் பாடல்களின் மூலம் அறிய முடிகிறது.

தலைவியின் குடும்பத்தில் இருப்போர் நற்றாய், தந்தை, தலைவியின் வீரம் மிக்க அண்ணன்மார்கள், செவிலித்தாய், தலைவியைப் பிரியாத தோழி ஆகியோர். அழகிய நிலவு போன்ற முகத்தையும், அதில் வில் போன்ற வளைந்த புருவங்களையும், அதன் கீழ் உயிரைக் குடிக்கும் வேல் போன்ற கண்களையும் கொண்ட ஒளி பொருந்திய முகத்தைக் கொண்டவள் அத்தலைவி. நறுமணம் மிக்க தேன் சொட்டும் மலர்களைத் தனது அழகிய நீண்ட குழலில் அணிந்து, சிறப்பான அணிகலன்களையும் அணிந்தவள்.

அவளது தமையன்கள் வீரம் மிக்கவர்கள் தங்கள் வாழ்வில் குறுக்கிடும் எவருடைய உயிரையும் போக்கிவிடுபவர்கள். அவர்களுக்கு மிக அருமையான நறுமணம் மிக்க சந்தனம், அகில் போன்ற மரங்கள் எல்லாம் ஒரு பொருட்டே அல்ல. அழகிய மலையில், முகில் தடவிச் செல்லும் அளவிற்கு உயர்ந்து வளர்ந்துள்ள அந்த மரங்களை வெட்டி வீழ்த்தி அங்குத் தினை விதைத்துப் பயிரிடுகிறார்கள்.

அந்தத் தினைப்புனத்தைக் காவல் காக்க தலைவியைத் தோழியுடன் அனுப்பி வைக்கிறார்கள். உடல் மணக்கும்படி சந்தனக் குழம்பைப்

பூசிக்கொண்டிருக்கும் தலைவிக்கு, தினைப்புனத்தில் சந்தன மரங்களைக் கால்களாக நிறுத்தி அமைக்கப்பட்ட பரணில் நின்று தானியங்களைத் தின்ன வரும் கிளிகள் போன்ற பறவைகளை ஆலோலம் பாடி விரட்டுவது கொடுக்கப்பட்ட பணி.

அப்பொழுது அயலூரைச் சேர்ந்த கட்டிளம் காளை ஒருவன் வேட்டையாட அப்பகுதிக்கு வருகிறான். அவன் துரத்தி வந்த மானின் மீது அம்பெய்கிறான். ஆனால் அந்த மானோ உடலில் தைத்த அம்புகளுடன் தப்பி ஓடிவிடுகிறது. மானைத் துரத்தி வரும் தலைவன் பரணில் தினைப்புனம் வழி செல்கையில் பரணில் நிற்கும் தலைவியிடமும் தோழியிடமும், பெண்களே நான் வேட்டையாடிய மான் அம்புகளுடன் இப்பக்கம் வந்ததைப் பார்த்தீர்களா? (1) என்று கேட்கிறான். இது தலைவன் தலைவி ஆகிய இருவரின் காதலின் துவக்கம். தலைவியின் அழகில் தனது உள்ளத்தை அவளிடம் பறி கொடுக்கிறான்.

தலைவியின் முகத்தை மறக்க இயலாமல் தனது ஊருக்குத் திரும்புகிறான். தலைவியின் நினைவு தன்னை வாட்டுவதாகத் தனது தோழனிடம் கூறுகிறான். வேட்டையாடிய விலங்கைக் கண்டீர்களா என்று கேட்கச் சென்ற இடத்தில் தலைவி என் உள்ளத்தைக் கவர்ந்து கொண்டுவிட்டாள்(9), தினைப்புனம் காக்கும் தலைவியின் அழகில் என்மனம் கட்டுண்டு கிடக்கிறது(30), தலைவியின் முலைகள் மேல்

கொண்ட விருப்பினால் எனது நலனும் பெருமையும் அழிந்துவிட்டது(23) என்று தலைவன் தோழனிடம் கூறுகிறான். தலைவியைத் தான் சந்தித்த இடத்தை தோழனுக்கு அடையாளம் சொல்லி அனுப்புகிறான். ஆவல் மேலிடத் தலைவனின் உள்ளத்தைக் கவர்ந்தவள் எப்படி இருப்பாள் எனக் காணச் செல்லும் தோழனும் தலைவியைப் பார்த்து அயர்ந்து போகிறான். இத் தலைவியை விட்டு எவ்வாறு தலைவன் பிரிந்து வந்தான்? அது அவனது உள்ளத்தின் உறுதியைக் காட்டுகிறதோ (28) என எண்ணி வியக்கிறான்.

அரண் போன்ற மலைகள் சூழ்ந்து நடுவே இருக்கும் அழகிய தலைவியின் சிற்றூருக்கு, கொடிய விலங்குகளும், பாம்புகளும், வேங்கைப் புலிகளும், மதநீர் சொட்டும் மதம் பிடித்த யானைகளும் குறுக்கிடக் கூடிய அச்சம் தரக் கூடிய வழியில் தனது வலிமையான கால்களையும், தனது வேலையும் மட்டும் துணையாகக் கொண்டு மீண்டும் தலைவியைக் காண வருகிறான் தலைவன். அவளைச் சந்திக்க வாய்ப்பு தேடி அவளது தோழியின் மூலம் அணுக விரும்புகிறான். தினைப்புனம் அருகில் உள்ள வேங்கை மரத்தின் கீழ் நின்று தலைவிக்குக் கொடுக்க கையில் தான் கொணர்ந்த பூந்தழைகளுடன் நின்று கொண்டிருப்பவன் கண்ணில் தோழி தென்படுகிறாள்.

தலைவியைக் காண்பதே தன்னை வாட்டுவதாக (19) தனது ஆற்றாமையைத் தோழியிடம் தலைவன்

கூறுகிறான். சந்தன மரம் போன்ற அருமையான மரங்களை எல்லாம் வேரோடு வெட்டி உழுது நிலத்தைப் பண்படுத்தி தினை வித்துக்களை விதைத்துப் பயிரிட்டு தினைப்புனம் உருவாக்கும் அவளது அண்ணன்மார் போன்று தலைவிக்கும் எனது வருத்தம் புரியவில்லை என்கிறான் தலைவன் (24). நான் தலைவியைக் குறித்து நன்கே அறிவேன். இளமை நிரம்பிய அவள் தனது இடை வருந்தும்படியாக சிறிது தொலைவு அவள் நடந்து செல்வதற்கு முன்னரே என் நெஞ்சம் அவளது இடை இற்று விழுந்து விடுமே என்று அஞ்சும், அவள் சிறிதும் என்பால் அன்புகாட்டுவதைக் காணாது நைந்து உருகி என் நெஞ்சம் வருந்துகிறது. என் உள்ளம் அவள் பின் சென்று தளர்ந்து விடுகிறது (17) என்று தலைவன் தோழியிடம் கூறுகிறான்.

நான் வந்தால் மலை நெற்குவியலுக்குப் பாதுகாப்பு இருக்கும். இங்கேயே நான் இருப்பேன் என்றால் சிவந்த தினையினையும் கருந்தினையினையும் கொண்ட தினைப்புனக் காவலாகவும் இருக்கும் (8) என்று தலைவன் தோழியிடம் நயமாகப் பேசி தனக்கு ஆதரவாக மனமாற்றம் கொண்டுவர விரும்புகிறான். தனது ஊரிலிருந்து தலைவிக்குக் கொணர்ந்த பூந்துகளைத் தலைவிக்குக் கொடுக்குமாறு தோழியிடம் கொடுக்கிறான்.

தலைவன் தரும் அன்பளிப்பை ஏற்க இயலாமல் மறுக்க வேண்டிய சூழ்நிலையை விளக்குகிறாள் தோழி. வலிமைமிக்க பெரும் புலியினைப் போன்று

கொடுமை மிக்கவர் என்தமையன் மார்கள். நீயும் வலிமை மிக்க பெரும்புலியினைப் போன்றுள்ளாய். ஆதலால் இருவருக்கும் இடையில் மோதலைத் தவிர்க்க விரும்புவதால் நாங்கள் நீ கொணர்ந்த அருமையான இத்தழையினை ஏற்க இயலாத சூழ்நிலை இன்று. ஆதலால் நீ இத்தழையினை நாளைக் கொண்டுவந்தால் நாங்கள் ஏற்றுக் கொள்ள இயலும் (20) என்கிறாள் தோழி தலைவனிடம். பிறகு அவனது வற்புறுத்தல் காரணமாக ஏற்றுக் கொள்கிறாள். நீ கொண்டு வந்த இக் குறுங் கண்ணிகள் வாடாதவாறு தலையிடம் சேர்த்து, இக்கண்ணிகள் நல்லனவென்று நான் கூறினால், மையுண்ட கண்களையுடைய தலைவி வருந்தாமல் ஏற்றுக் கொள்ள உடன்படுவாள் (21) என்று தலைவனிடம் தோழி கூறி, தலைவன் தலைவிக்குத் தரும் அன்பளிப்பைத் தோழி ஏற்றுக் கொண்டு தலைவியிடம் சேர்ப்பிக்க உதவுகிறாள்.

பரணில் உள்ள தலைவியை அணுகும் தோழி தலைவன் தந்த பூந்தழைகளை அவளிடம் கொடுத்துவிட்டு, உன்னால் தன் விருப்பம் நிறைவுறும் என்று எண்ணி உனக்கு அன்பளிப்புகளுடன் வருகிறான் அந்த மலைநாட்டுத் தலைவன். ஆனால் தனக்கு என்ன தேவை என்பதை எனக்கு விளங்கச் சொல்கின்றானில்லை. வேங்கை மரத்தினது நிழலில் நிலை கொள்ளாது நிற்கின்றான். வலிமை மிக்க பெரும் புலியினை ஒத்தவனாகிய இவனது மனக் கருத்துதான் என்னவாக இருக்கலாம்

(31) என்று தோழி தலைவியைக் குறும்பாக வினாவுகிறாள்.

பரணில் காவல் காக்கும் தலைவியையும் தோழியையும் தினைப்புனத்தில் நுழைந்த மதயானை ஒன்று அச்சுறுத்துகிறது. தக்க நேரத்தில் அங்கு வந்த தலைவன் அம்பு வீசி யானையை விரட்டி பெண்களைக் காப்பாற்றுகிறான். சுனையில் பூத்த நீலோற்பலம் பூக்களையும் மணம் வீசும் அசோக மலர்களையும் கொய்து வந்து தலைவியின் கூந்தலில் சூட்டுகிறான். தலைவி தலைவன் மீது காதல் கொள்கிறாள். தலைவன் தலைவியிடம், வீரம் மிக்க உன் அண்ணன்கள் ஒரே அம்பினால் மற்றவரைக் கொல்வர். ஆனால் காமனின் கணைகளை உனது இருவிழிகளாகக் கொண்டு நீ உன் இரு கண்களால் தாக்கி என்னைக் கொல்கிறாய் (22) சொல்கிறான்.

தலைவனும் தலைவியும் தினைப்புனம் அருகில் உள்ள சோலையில் அடிக்கடி சந்தித்து தங்கள் காதலில் கட்டுண்டு இருக்கையில் காலம் கடந்து செல்வதைக் கருத்தில் கொள்ளாமல் இருக்கிறார்கள். ஆனால் தினைப் பயிர் வளர்ந்து முற்றிவிடுகிறது. வேங்கை மரபும் பூக்கத் தொடங்கி அறுவடைக் காலம் நெருங்குவதை உணர்த்துகிறது. காதலர் இருவரும் அதை உணர்ந்தார் இல்லை. ஆனால் தோழிக்குக் கவலை ஏற்படுகிறது.

தலைவியைத் தேடி வரும் தலைவனை விரைவில் தலைவியைத் திருமணம் செய்து கொள்ள வைக்கும்

ஏற்பாட்டில் இறங்குகிறாள் தோழி. அவனிடம், தலைவனாகிய உங்கள் மீது கொண்ட காதல் உணர்வால், பெண்மை மிகுந்த நிலையில் வாய்திறந்து தலைவி ஆலோலம் பாடி விரட்டுகையில் அவளது குரல் கிளியின் குரல் போலவே இருப்பதால், தினை உண்ணும் பறவைகள் அஞ்சி எழுந்து பறப்பதில்லை. ஆகவே குரல் மாறிவிட்ட இவள் பறவை விரட்டும் தொழிலுக்கு ஏற்றவள் இல்லை என இனி அவளை வீட்டிலேயே நிறுத்திவிடுவர் (3) என்று தோழி தலைவனிடங் கூறுகிறாள். அதேபோல தலைவியிடம், தலைவியே, பனை போன்ற வளர்ந்த இன்பத்தை நாம் எதிர்நோக்கியிருக்க, அதற்கு மாறாகப் பாத்தியில் விளையும் சிறு தினையாக அது மாறிவிடுமாறு, அறுவடைக் காலத்தின் அறிகுறியாக வேங்கை மரம் பூத்துவிட்டது. அறுவடை நெருங்கும் அளவு பயிரும் வளர்ந்துவிட்டது, இனி தலைவனைப் பார்க்க இங்கு வரும் வாய்ப்பு இல்லாது போகும். இற்செறிப்பால் தலைவனிடம் இருந்து பிரியும் நிலை வரப்போகிறது (5) எனத் தோழி தலைவியிடம் கூறுகிறாள்.

அவ்வாறே, பகலில் தலைவியை நாடி வந்த தலைவனைக் கண்டு தலைவியை விரைவில் மணம் புரிந்து கொள்ளச் சொல்லி மீண்டும் வலியுறுத்துகிறாள் தோழி. என்ன ஆகப்போகிறதோ! பெருந்தன்மை இல்லாத இந்த இள வேங்கை மரமானது பூ பூத்து தினைக் கதிர் அறுவடை செய்ய வேண்டிய நாள் வருவதைத் தெரிவிக்கிறது. பொன்னாலாகிய அணிகலன் முதலியவற்றைப்

பரிசமாக எதிர்பார்க்கும் போர் விருப்பமிக்க வேலினையுடையவர் எந்தையும் என்னையன் மாரும். என்ன கொடுமை. இனிமேல் தலைவிக்கும் உங்களுக்கும் உள்ள நட்பானது கதிர் அறுக்கப்பட்ட புனம் போல வறண்டு விடும் (18) என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.

இனி தலைவி வீட்டில் அடைபட்டுவிடுவாள் என்பதைப் புரிந்து கொள்ளும் தலைவன் எவ்வாறு இனி அவளைச் சந்திப்பது என்று கவலை கொள்கிறான். அவனது துயரை உணர்ந்த தோழி தலைவி இற்செறிப்புக்கு உள்ளானால், வேறு எவ்வாறு சந்திக்கலாம் எனக் குறிப்பு கொடுக்க நினைக்கிறாள். தலைவனே, உயர்ந்த பலாமரங்களின் பக்கத்திலே, மரங்களால் பாத்தியாகப் பிரிக்கப்பட்ட தோட்டத்தின் நடுவே, நிலவொளி படர்ந்தது போன்ற மிகுந்த மணல் வட்டமாகப் பரவியுள்ள பகுதியில், காட்டாற்றுக்கு அருகே உள்ள குளிர்ந்த சோலையில் நானும் தலைவியும் பகலில் விளையாடுவோம் (29) என்று தோழி தலைவனிடம் சந்திக்க வேண்டிய இடத்தைக் குறிப்பால் கூறுகிறாள்.

தலைவி இற்செறிப்பு செய்யப்படுகிறாள். அவளைக் காண வரும் தலைவனால் அவளைப் பார்க்கக் கூடும் என்று எண்ணும் இடங்களில் எங்கும் அவளைக் காணாது தவிக்கிறான். மாறாதப் புகழுடைய பாண்டியனின் மதுரை மாநகரைப் போன்ற சிறப்புப் பொருந்திய என் தலைவியினை அவளது

விளையாட்டுப் பண்ணையிலும் காணமுடியவில்லையே. அழகிய என் தலைவியை என்னால் எங்கும் காண இயலவில்லையே (4) என்று அவளைக் காண இயலாத வருத்தத்துடன் தனக்குள் சொல்லிக் கொள்கிறான். இரவில் வந்து சந்தித்து விடுவது என்று தீர்மானித்துக் கொள்கிறான். கொடிய விலங்குகள் வாழும் காட்டு வழியில் அவளைத் தேடி இரவில் வருகிறான். இந்நிலையில் தலைவனின் உயிருக்கு ஏற்படக்கூடிய இடர் குறித்து, அவ்வாறு ஏதாவது நிகழ்ந்தால் தலைவியும் உயிர் வாழ விரும்ப மாட்டாளே என்று தோழி அச்சம் கொள்கிறாள்.

அவன் இரவில் வருவதைத் தவிர்க்க வேண்டுகிறாள் (இக்கருத்திற்கே திணைமாலை நூற்றைம்பது நூலில் இருக்கும் 31 குறிஞ்சிப் பாடல்களில் 8 பாடல்கள் ஒதுக்கப்பட்டுள்ளது என்பது தோழி எந்த அளவு தலைவனின் இச்செயலைத் தடுக்க நினைக்கிறாள் என்பதைக் காட்டுகிறது). தலைவனே, மிகுந்த இருள் நிரம்பிய நள்ளிரவிலே, நீ வந்தாயானல் அதனால் உனக்கு இடையூறு நேரும் எனத் தலைவி கலங்குவாள் அல்லவா? அதனை நீ எண்ணிப் பார்க்க வேண்டுகிறேன் (6). மதம் கொள்ளும் யானைகளை, பெரும் புலிகளை, கொடிய நாகங்களை எதிர் கொள்ளக்கூடிய வழியில் இரவில் நீ வருவதை என் தலைவியால் தாங்கிக் கொள்ள இயலாது (7, 11, 13,10). உன் நலனுக்காகத் தலைவி வருந்தும்படி அவளைக் காண இரவில் வரவேண்டாம். அவ்வாறு வருவீர் என்றால் அதைத் தாளாது இனி உயிர் வாழ மாட்டாள்

தலைவி (25, 26) என்று பலவாறு கூறி தோழி தலைவனைத் தடுக்கிறாள்.

தலைவனைக் காணாது அவனை எண்ணி உடல் நலிவுறுகிறாள் தலைவி. அவளுக்கு ஏற்பட்டிருக்கும் நோயை நீக்க வேலவனின் வெறியாட்டுக்கு ஏற்பாடு செய்கிறாள் செவிலித்தாய். அவளுக்குத் தலைவியின் நிலைக்கான காரணத்தை விளக்குகிறாள் தோழி. வெறியாட்டும் பொருட்டு வரவழைத்த வேல் கைக்கொண்ட பூசாரி சென்றுவிடட்டும். பலியிடக் கொண்டுவந்துள்ள ஆட்டுக் குட்டியினையும் விடுவிக்கவும், கடவுளுக்குப் படைக்கக் கொண்டு வந்துள்ள கள்ளினையும் அதனை உண்ணக் காத்திருக்கும் மக்களுக்குக் கொடுத்துவிடவும் (12). தலைவியின் நெஞ்சத்தைக் கவர்ந்தவன் ஒருவன் உள்ளான் செவிலித்தாயே! தினைப்புனம் காக்கையில் மதங்கொண்ட யானை ஒன்று தலைவியைத்தாக்க வந்த வேளையில் அதனைத் தாக்கிவிரட்டி தலைவியைக் காப்பாற்றினான் ஒருவன். அக் கட்டழகன் தலைவியின் உள்ளத்தில் இடம் பிடித்துவிட்டான் (2), யானையிடம் இருந்து காப்பாற்றிய தலைவனைத்தான் தலைவி மணப்பாள் (14) என்று தோழி செவிலிக்குக் கூறுகிறாள். குற்றமில்லாத என் தலைவிக்கு நலக்குறைவு எதுவும் இல்லை (காட்டாற்று நீரில் அடித்துச் செல்லப்பட்ட பொழுது, பாய்ந்து சென்று காப்பாற்றிக் கரை சேர்த்த அவளது காதலனைத் தவிர்த்து வேறு எவரையும் உறுதியாகத் தலைவி தன் வாழ்க்கைத் துணையாக ஏற்க

மாட்டாள் என்று செவிலியிடம் தோழி கூறும் ஒரே ஒரு பாடலின் (12) கருத்து மட்டும் கதைப்போக்கில் ஏற்படுத்தக் கூடிய முரண் கருதித் தவிர்க்கப்பட்டிருக்கிறது).

தலைவியைத் தேடி தலைவன் வருவதைத் தாயும் அறிந்து விடுகிறாள், நிலை மோசமாவதை உணர்கிறாள் தோழி. எனவே தலைவனிடம், தலைவனே, இதற்கு முன் தலைவியை மணவாது நாளைக் கழித்தீர்கள். இனிமேலாகிலும், காலம் தாழ்த்தாது மணந்து கொள்வீர்கள் என்று எண்ணி உங்களுக்கு ஒன்று சொல்கின்றேன். இடர் கண்டு வெறுக்கத்தக்க இம்மலை வழியாகத் தலைவியைத்தேடி நீங்கள் வருவதை எங்கள் அன்னை பார்த்துவிட்டதால் எங்களைச் சினந்தாள். இனி எங்கள் மீது கண்காணிப்பை அதிகப்படுத்துவாள். ஆகையால், தலைவியை விரைவில் மணமுடிப்பீர்களாக (27) என்று தோழி தலைவனிடம் கூறினாள். தலைவனும் தனது ஊரைச் சேர்ந்த சான்றோர்களைத் தனது சார்பாகத் தலைவியின் இல்லத்திற்கு அனுப்புகிறான்.

ஆனால், தலைவியின் குடும்பத்தார் தலைவன் தலைவியை மணமுடித்துத் தருமாறு முன்வைத்த கோரிக்கையை ஏற்கவில்லை. தலைவியை அடைய முடியாத ஆற்றாமையால் மடல் ஊரத் துணிந்த தலைவன் அதைத் தோழிக்குத் தெரிவிக்கிறான்(16). அன்று பூத்த மணக்கும் சுரபுன்னை மலர்களைச் சூடி, அதன் தேனால் நனையப்பட்ட

கூந்தலையுடைய தலைவி, அணிகலனோடு கூடிய தன்னுடைய மார்பினை எனக்குக் கொடுத்து, என்னோடு சேரும் காலம் வரைக்கும், மடலேற அணிந்த எலும்பாற் செய்த அணிகலன் என் மார்பிலிருந்து நீங்கப் போவதில்லை என்று உனக்குச் சொல்கிறேன். அதற்கு மாறாக வேறு சொல் கூறமாட்டேன். பனைமடலால் செய்யப்பட்ட குதிரையின் மீதே அமர்ந்து தலைவியின் தெரு வழியே மடல் ஊருதற்குத்துணிந்து விட்டேன் என்று தலைவன் தோழியிடம் கூறுகிறான்.

தலைவனும் தலைவியும் காதல் கைகூடாமல் துயர் கொள்வதைச் சகிக்கமாட்டாத நற்றாய் தலைவனின் கோரிக்கையை ஏற்றுத் தலைவியை அவனுக்கு மணமுடிக்குமாறு தலைவியின் தந்தைக்கும் தமையனுக்கும் அறிவுறுத்துகிறாள்(15). தலைவன் மன்றல் விரும்பி அனுப்பிய, குறையேதும் கூறவியலாத சான்றோர்களினது வருகையினை ஏற்றுக் கொண்டவர்களாக, மறுக்காது நீர் வார்த்துக் கொடுத்தலாகிய மண முறையில் மகளை மணம் செய்து கொடுத்தல் நல்லது. அல்லாமல், மகளின் தளர்ச்சியுறாத எழிலும் முலைகளுமாகிய இரண்டினுக்கும், கடலாற் சூழப்பட்ட இந்த உலகைக் கொடுப்பினும் பொருத்தமான விலையாகுமோ? காதலினையே மதிக்கவேண்டும் என்று நற்றாய் தலைவியைத் தலைவனுக்கு மணமுடிக்க முடிவெடுக்கிறாள்.

*****

**குறிப்பு** - கதையாகக் கோர்க்கப்பட்ட பாடல்களின் வரிசை, பாடல் எண்களுடன் கொடுக்கப்பட்டுள்ளது:

1. பெண்களே நான் வேட்டையாடிய மான்கள் அம்புகளுடன் இப்பக்கம் வந்ததைப் பார்த்தீர்களா?
9. வேட்டையாடிய விலங்கைக் கண்டீர்களா என்று கேட்கச் சென்ற இடத்தில் தலைவி என் உள்ளத்தைக் கவர்ந்து கொண்டுவிட்டாள்
30. தினைப்புனம் காக்கும் தலைவியின் அழகில் என்மனம் கட்டுண்டு கிடக்கிறது என்று தலைவன் தோழனிடம் கூறுகிறான்
23. காதலியின் முலைகள் மேல் கொண்ட விருப்பினால் தன் நலனும் பெருமையும் அழிந்துவிட்டதாகத் தலைவன் கூறுகிறான்
28. தலைவியைக் கண்ட தோழன் இவளை விட்டு எவ்வாறு தலைவன் பிரிந்து வந்தான்? அது அவனது உள்ளத்தின் உறுதியைக் காட்டுகிறதோ என எண்ணி வியக்கிறான்
19. தலைவியைக் காண்பதே தன்னை வாட்டுவதாகத் தனது ஆற்றாமையைத் தோழியிடம் தலைவன் உரைத்தல்
24. பிறர் அருமை அறியாத தனது அண்ணன்களைப் போன்று தலைவிக்கும் எனது வருத்தம் புரியவில்லை என்கிறான் தலைவன்
17. நான் தலைவியைக் குறித்து நன்கே அறிவேன் என்று தலைவன் கூறுவது
8. தலைவன் தோழியிடம் நயமாகப் பேசி தனக்கு ஆதரவாக மனமாற்றம் கொண்டுவர விரும்புதல்

20. தலைவன் தரும் அன்பளிப்பை ஏற்க இயலாமல் மறுக்க வேண்டிய சூழ்நிலையை தோழி விளக்குகிறாள்

21. தலைவன் தலைவிக்குத் தரும் அன்பளிப்பைத் தோழி ஏற்றுக் கொண்டு தலைவியிடம் சேர்ப்பிக்க உதவுகிறாள்

31. உன்னால் தன் விருப்பம் நிறைவுறும் என்று எண்ணி உனக்கு அன்பளிப்புகளுடன் வருகிறான் தலைவன் என்கிறாள் தோழி

22. வீரம் மிக்க உன் அண்ணன்கள் அம்பினால் மற்றவரைக் கொல்வர், ஆனால் நீ உன் கண்களால் என்னைக் கொல்கிறாய்

3. தலைவனே உன் உறவால் தலைவியின் இயல்பு மாறியதைக் கண்டு இனி அவளைத் தினைப்புனம் காக்க அனுப்பாமல் வீட்டில் இருத்திவிடுவார்கள்

5. தலைவியே அறுவடை நெருங்கும் அளவு பயிர் வளர்ந்துவிட்டது, இனி தலைவனைப் பார்க்க இங்கு வரும் வாய்ப்பு இல்லாது போகும் எனத் தோழி தலைவியிடம் கூறுகிறாள்

18. பகலில் தலைவியை நாடி வந்த தலைவனைக் கண்டு தலைவியை விரைவில் மணம் புரிந்து கொள்ளச் சொல்வது

29. பலாமரக் காட்டருகில், காட்டாறு பாயும் சோலைக்கருகில் உள்ள மணல் வெளியில் நானும் தலைவியும் பகலில் விளையாடுவோம் என்று தோழி தலைவனுக்குக் குறிப்பு கொடுக்கிறாள்

4. அழகிய என் தலைவியை என்னால் எங்கும் காண இயலவில்லையே

6. தலைவனே இரவில் வருவதால் உனக்கு ஏற்படக்கூடிய இடையூற்றுக்குத் தலைவி வருந்துவாள் என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்

7. தலைவனே நீ இரவில் நீ வருவதை என் தலைவியால் தாங்கிக் கொள்ள இயலாது என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்

11. இரவில் மதம் கொண்ட யானைகள் உலாவும் வழியாகத் தலைவியைக் காண வரவேண்டாம்

13. பாம்புகளும் யானைகளும் நிறைந்த காட்டு வழியின் வழியே இரவில் தலைவிக் காண வரவேண்டாம் என்று தோழி கூறுகிறாள்

10. தலைவனே தேவர்கள் உலாவும் இடங்கள் வழியாகத் தலைவியைக் காண வருவதைக் கைவிடுங்கள்

25. உங்கள் நலனுக்கா தலைவி வருந்தும்படி அவளை இரவில் காண வரவேண்டாம்

26. உங்கள் நலனுக்கா தலைவி வருந்தும்படி அவளை இரவில் காண வரவேண்டாம்

12. செவிலியிடம் வெறியாடலைத் தவிர்க்கும்படியும், தலைவி அவளது காதலனை மணக்க விரும்புகிறாள் என்றும் தோழி அறிவுறுத்துகிறாள்

2. தலைவியின் நெஞ்சத்தைக் கவர்ந்தவன் ஒருவன் உள்ளான் செவிலித்தாயே!

14. தினைப்புனம் காக்கையில் மதங்கொண்ட யானையிடம் இருந்து காப்பாற்றிய தலைவனைத்தான் தலைவி மணப்பாள் என்று தோழி செவிலிக்குக் கூறுகிறாள்

27. தலைவிக்காக நீ வருவதைத் தாய் அறிந்து கொண்டாள், இனி காவல் மிகுதியாகும் எனவே தலைவியை விரைவில் மணம் முடிப்பாயாக

16. தலைவியை அடைய முடியாத ஆற்றாமையால் மடல் ஊரத் துணிந்த தலைவன் அதைத் தோழிக்குத் தெரிவிக்கிறான்

15. தலைவனின் கோரிக்கையை ஏற்றுத் தலைவியை அவனுக்கு மணமுடிக்குமாறு நற்றாய் தலைவியின் தந்தைக்கும் தமையனுக்கும் அறிவுறுத்துகிறாள்

*****

**உதவிய தளங்கள்:**

1. கணிமேதாவியார் இயற்றிய திணைமாலை நூற்றைம்பது
மூலமும் உரையும் - மகாவித்வான் ரா. ராகவையங்கார்
செந்தமிழ்ப் பிரசுரம், 1927 (இரண்டாம் பதிப்பு)
https://upload.wikimedia.org/wikipedia/commons/4/4e/திணைமாலை_நூற்றைம்பது.pdf
https://ta.wikisource.org/s/31hg

2. கணிமேதாவியார் இயற்றிய திணைமாலை நூற்றைம்பது
விளக்க உரை - தமிழ்ப் புலவர் திரு. அ. நடராச பிள்ளை
http://www.tamilvu.org/library/l2F00/html/l2F00ind.htm
http://www.tamilvu.org/library/l2F00/html/l2F00vur.htm

3. கணிமேதாவியார் இயற்றிய திணைமாலை நூற்றைம்பது
உரையாசிரியர்: பால சங்கரன், எம்.ஏ., பி.எட்.
https://www.chennailibrary.com/pathinenkeelkanakku/thinaimaalai150.html

4. திணைமாலை நூற்றைம்பது - கணிமேதாவியார்
தமிழ் இலக்கியத் தொடரடைவு,
முனைவர்.ப.பாண்டியராஜா
http://tamilconcordance.in/TABLE-THINAIMALAI150-TEXT.html

*****

# *தமிழ் அழகியல்: நூல் திறனாய்வு*

## — *முனைவர் க. சுபாஷிணி*




தமிழ் அழகியல்
ஆசிரியர்:
இந்திரன்
(இந்திரன் ராஜேந்திரன்)
வெளியீடு:
டிஸ்கவரி புக் பேலஸ்
பதிப்பு: 2022
விலை: ₹230
பக்கம்: 208
ISBN: 9789391994631

அழகு - மிக எளிதாக ஒவ்வொரு நாளும் நாம் பயன்படுத்தும் சொல்.

**தமிழ் அழகியல் நூல் என்ன கூறுகிறது?**

அழகு என்றால் என்ன என்ற தேடல், தேடலுக்கான உலக தத்துவவாதிகளான பிளேட்டோ, அரிஸ்டாட்டில், கன்பூசியஸ் போன்றோரின் பதில்கள். Aesthetics என்று ஆங்கிலத்தில் குறிப்பிடப்படும் அழகியல் துறையைத் தமிழ்ச் சூழல் வளர்த்தெடுக்கவில்லை என்ற ஆதங்கத்தை

முன்னிறுத்தி இந்த நூலில் வருகின்ற ஒவ்வொரு கட்டுரைகளும் அமைந்திருக்கின்றன.

ஒரு வெள்ளைத் தாள் தான். ஆனால் அதில் ஒரு கோட்டினைப் போட்டு, அந்த காகிதத்தின் உள்ளே இருக்கும் வெளியை அக்கோடுகளால் பிரித்து அவற்றை வரையறுத்து வெளிக்காட்டும்போது வெள்ளைத் தாளில் ஒரு வடிவம் தென்படுகிறது. கோடு கலையின் ஒரு மிகப்பெரிய கண்டுபிடிப்பு. தன்னைச் சுற்றியுள்ள பொருள்களைப் புரிந்து கொள்வதற்காக மனிதன் கண்டெடுத்த ஒரு மிகப்பெரிய கருவி தான் கோடு என்கிறார் நூலாசிரியர். தமிழ்நாட்டு ஓவியர்களின் தொழில் நேர்த்திக்கு அவர்களது கோடுகளைப் பற்றிய ஆழ்ந்த புரிதல் தான் காரணம் என்றும் குறிப்பிடுகிறார்.

இங்கு ஐரோப்பாவில் நான் ஏராளமான தேவாலயங்கள், வழிபாட்டுக் கட்டிடங்கள், அரச கட்டிடங்கள், அருங்காட்சியக கட்டிடங்கள் போன்றவற்றைப் பார்த்து அவற்றை உன்னிப்பாகக் கவனித்து ரசிப்பதுண்டு. பலருக்கும் பல்வேறு விஷயங்கள் ஆழமாகப் பிடிப்பதைப் போல எனக்குத் தனிப்பட்ட வகையில் கட்டிடங்களைப் பார்த்து ரசிப்பது மனதிற்கு ஆழமான மகிழ்வையும் நிறைவையும் தருகின்ற ஒன்றாகவே நீண்ட காலமாக இருப்பதை நான் உணர்ந்து வந்திருக்கிறேன். கட்டிடங்கள் எனும் போது ஐரோப்பா மட்டுமல்ல, உலகின் எல்லாப் பகுதிகளிலும் நான் சென்று பார்த்த கட்டிட

அமைப்புகள் எனக்கு மனிதரின் படைப்புத்திறனைப் பார்த்து வியக்க வைக்கின்றன. அந்த வியப்பு ஆழ்ந்த மன மகிழ்ச்சியைக் கொடுக்கின்றது. ஐரோப்பாவை எடுத்துக் கொண்டால் கோத்திக், பாரோக் என இரு வகையாக பண்டைய கலை வடிவத்தைப் பிரிக்கின்றார்கள். ரெனைசான்ஸ் காலத்துக் கலைப் படைப்புகள் புதிய வெளிச்சத்தை ஐரோப்பாவெங்கும் பாய்ச்சியது.

தஞ்சை பெரிய கோயில், சிலப்பதிகாரம், பிக்காசோவின் குவர்னிகா, வீர சந்தானம், சாம் அடைக்கலசாமி போன்றோரின் ஈழப்படுகொலை பற்றிய ஓவியங்கள் போன்றவை - இவை கலைப் படைப்புகள் மட்டுமல்ல; அவை வரலாற்றுச் சாட்சியங்கள் என்கிறார் நூலாசிரியர் இந்திரன்.

நூலில் வழங்கப்பட்டுள்ள கட்டுரைகள் ஐந்து பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. முதல் பகுதி கலை, அழகியல், கோடு, வண்ணம், வெளி, கலை அடையாளம், குறியீடு, கலைப்பார்வை ஆகியவற்றை நமக்கு அறிமுகப்படுத்துகிறது.

நூலின் இரண்டாம் பகுதி நமக்கென்று ஒரு அழகியல் தேவை என்பதை விவரிக்கும் வகையில் சில வினாக்களை எழுப்பி ஓவியக் கலையின் அக மரபுகளை விளக்குகின்றது. இப்பகுதியில் வருகின்ற திணைக் கோட்பாடு பற்றிய நூலாசிரியரின் கட்டுரை மிகச் சிறப்பான ஒரு படைப்பு என்பது எனது கருத்து. ஐந்திணையின் 14 வகை பிரிவுகளை

இக்கால சூழலில் உலகம் முழுவதும் பரவி இருக்கும் தமிழர்களை மனதில் கொண்டு தேவைக்கேற்ப தமிழ் அழகியலை விரிவாக்கம் செய்து காண வேண்டும் என்று கூறும் நூலாசிரியர் இந்திரனின் கருத்து மிக முக்கியமான ஒன்று.

அதனை அடுத்து வரும் மூன்றாம் பகுதியில் பல்வேறு சிற்பங்கள் கலைப் படைப்புகள் பற்றிய விளக்கங்களாக இப்பகுதி அமைகின்றது. எடுத்துக்காட்டாக, மாமல்லபுரத்து கொற்றவையின் போர், திருப்பருத்திக்குன்ற ஓவியம், கைலாசநாதர் கோயில், திருவள்ளுவர் சிலை, நிழலாகத் தேய்ந்து போகும் தோற்பாவைக் கூத்து பற்றி ஆசிரியர் விளக்கம் ஆகியவை நன்று. அதில் இறுதிக் கட்டுரையாக வருகின்ற தோற்பாவைக் கூத்து பற்றிய அவரது கருத்துக்கள் குறிப்பாக இக்காலகட்டத்தில் குழந்தைகளுக்கு நன்கு அறிமுகமான சூப்பர் மேன் போன்ற வடிவங்களைக் கூட தோற்பாவை வடிவங்களாக அமைத்து அரசு தோற்பாவை கலை மடிந்து காணாமல் போகாமல் பள்ளிக்கூடங்களிலும் கல்விக்கூடங்களிலும் அதற்கு உயிர் கொடுக்க வேண்டும் என்ற கருத்தை முன்வைக்கின்றது. அரசு, அதிலும் குறிப்பாக பள்ளிக்கல்வித்துறை இதனைச் சாத்தியப்படுத்தினால் தோற்பாவைக் கூத்து தமிழ் மக்களின் சிந்தனைகளில் மீண்டும் புத்துயிர் பெறும்.

இதனை அடுத்து வரும் நான்காம் பகுதி தமிழ் ஓவியர்கள், கலை படைப்பாளர்கள் பற்றி பேசுகின்ற

ஒரு பகுதியாக அமைகிறது. தமிழ்நாட்டில் நன்கு அறிமுகமான சந்துரு, வீர சந்தானம், முத்துசாமி, ஆதிமூலம் இன்னும் சில படைப்பாளர்கள் பற்றிய கருத்துக்கள் நல்ல விளக்கங்களாக அமைகின்றன. இப்பகுதியில் இறுதியாக வருகின்ற நூலாசிரியர் இந்திரனின் பெண் உருவத்தைத் தான் கோட்டோவியமாக வரைய மேற்கொண்ட முயற்சிகள் பற்றி விவரிக்கும் கட்டுரை மிகச் சிறப்பு.



இக்கோட்டோவியங்களில் அவர் கூறும் வடிவங்களைத் தேடி எடுப்பதே ஒரு பெரிய சவால் தான். ஆயினும் அவரது நூற்றுக்கும் மேற்பட்ட பெண் சித்திர கோட்டோவியங்களில் இக்கால பெண்களின் வடிவமாக இருந்தாலும், அவர் மனதில் பதிந்த தமிழ்ப் பண்பாட்டுக் கூறுகளை மீறி அவை வெளிவரவில்லை என்ற வெளிப்படையான அவரது கருத்து சிறப்பு. இதில் வழங்கப்பட்டுள்ள நூலாசிரியர் இந்திரனின் கோட்டோவியங்கள் மிக அருமை.

நூலின் இறுதிப் பகுதியாக அமைவது நவீன கலைகளில் மக்கள் பண்பாடு தொடங்கி

புலியாட்டம், சிவ நடனம், மக்களின் மனக்குகை ஓவியங்கள், தமிழகத்தில் செப்பு வடிவங்கள் என்று ஆய்வு செய்கிறது. இறுதிக் கட்டுரையாக அமைவது முதலில் கோலம் போட்ட தமிழச்சி யார் என்ற தேடல். கிராமத்துத் தெருக்களில் வாசல்களில் நீர் தெளித்து சாணி உருண்டையில் பளிச்சென்று ஒரு பூசணிப்பூ வைத்து அதன் கீழ் கோலம் போட்டு கோடுகளால் சாலைகளை மட்டும் அல்லாது மனிதர்களின் மனங்களையும் அழகு செய்யும் கிராமத்துப் பெண்கள் நமது மனதில் காட்சியாய் விரிகின்றார்கள் நூலாசிரியரின் எழுத்துக்களின் வடிவில்.

இன்று தமிழ்ச்சூழல் போலித்தனம் மிகுந்த, இயற்கை வாழ்வியலிருந்து மிகத் தூரம் போய்விட்ட ஒன்றாகிவிட்டது. பிறரைப் போலி கவுரவத்திற்காகவும் வீண் புகழுக்காகவும் திருப்திப்படுத்துவதற்காகத் தமிழ் மக்களின் சிந்தனை போட்டி போட்டுக் கொண்டு அலைக்கழிந்து கொண்டிருக்கின்றது. இன்றைய பொருள் சார்ந்த சிந்தனையிலிருந்து தங்களைத் தாமே விடுவித்துக் கொண்டு தன் கண்களுக்கு முன்னே இயற்கையாய் பண்பாட்டின் விழுமியமாய், கலைகளின் வெளிப்பாடாய், கட்டிடக்கலையாய், கலைப் படைப்புகளாய், தத்துவ சிந்தனைகளாய் விரிந்து இருக்கின்ற தமிழ் அழகியலைப் புரிந்து கொள்ள இந்த நூல் தமிழ் உலகிற்கு ஓர் அழகிய கருவி.

புதிய பார்வையாக சிந்தனையை வழங்குகின்ற இந்த நூல் மிக விரிவாகத் தமிழ்நாட்டின் தமிழ் உயர்கல்வித் துறையில் தமிழ் இலக்கியம் மட்டுமல்லாது தமிழ் கலைகள், தத்துவத் துறைகளிலும் ஆராயப்பட வேண்டும்.

நூல்களில் ஆங்காங்கே எழுத்துப் பிழைகள் இருக்கின்றன. நூலாசிரியரும் பதிப்பாளரும் இந்தச் சிறிய குறையைக் களைந்து அடுத்த பதிப்பில் மேம்படுத்தப்பட்ட வகையில் இந்நூலைக் கொண்டு வர வேண்டும்.

தமிழ் அழகியலுக்குப் புத்துணர்ச்சி கொடுக்கும் நூலாசிரியர் இந்திரன் ராஜேந்திரன் அவர்களுக்கு எனது நல்வாழ்த்துக்கள்.

— முனைவர்.க.சுபாஷிணி

# யாழ்ப்பாணத்தவர் வாழ்வியலில் மாட்டுவண்டில்: நூல் திறனாய்வு

— *முனைவர் மு. இறைவாணி*




யாழ்ப்பாணத்தவர் வாழ்வியலில் மாட்டுவண்டில்
நூலாசிரியர்: திரு.மா.அருள்சந்திரன்
பதிப்பகம்: குமரன் புத்தக இல்லம்
ஆண்டு: 2020
பக்கங்கள்: xxi +119

ஈழத்தமிழர்களின் மரபுரிமைச் சின்னமான மாட்டு வண்டில் பற்றிய ஒரு தெளிவான அறிமுக நூலாக இந்நூல் அமைந்துள்ளது.

இயல் – 1: மாட்டு வண்டில் ஒரு அறிமுகம்

பண்பாட்டை அறிவதும் பண்பாட்டுச் சின்னங்களைப் பாதுகாப்பதும் கடமை. யாழ்ப்பாண மக்கள் விவசாய மக்களாக வாழ்ந்தமையால் மாட்டு வண்டில் அவர்கள் வாழ்க்கையில் இரண்டறக் கலந்திருந்தது. இன்று

கால மாற்றத்தால் அழிந்து கொண்டு வரக்கூடிய மாட்டு வண்டில் குறித்த தகவல்களை ஆவணப்படுத்த வேண்டும் என்ற ஆசிரியரின் விருப்ப வெளிப்பாடு இந்த முதல் இயல். மாட்டு வண்டில் தொடர்புடைய மொழி வழக்குகள், பழமொழிகள் இன்றும் வழக்கில் உள்ளன. ஆசிரியர் ஆறு கருத்துக்களை முதன்மை நோக்கமாகக் கொண்டு இந்நூலை எழுதியுள்ளமையை விளக்கியுள்ளார். இந்நூலிற்கான தேடல்கள், நேர்காணல், எதிர் கொண்ட சிக்கல்களை எழுதியுள்ளார்.

இயல் – 2: யாழ்ப்பாணத்து இலக்கியங்களும் மாட்டு வண்டிலும்

இலக்கிய பாரம்பரியத்தையும் தனக்கென தனித்துவமான நாகரிக பண்பாட்டு அடையாளங்களை உடைய யாழ்ப்பாண மக்களின் பயன்பாட்டில் மாட்டு வண்டில் இருந்தமையை இலக்கியங்களைச் சான்றாக வைத்து விளக்கியுள்ளார். நவீன இலக்கியங்களில் முதன்மையாக சொல்லப்பட்டிருப்பது பேராசிரியர் கணபதிப்பிள்ளை எழுதியுள்ள “காதலியாற்றுப்படை” என்ற பாடலில் திருவிழாவைப் பார்க்க மாட்டு வண்டிலில் அடியவர்கள் வருவதை பாடலைச் சான்றாகக் கொண்டு விளக்கியுள்ளார். மேலும் டானியல் 1982 இல் எழுதிய “கோவிந்தன்” நாவல் மாட்டு வண்டி பயன்படுத்துவது என்பது சமூக அந்தஸ்து அந்த விதத்தில் தங்கள் பிள்ளைகளை கல்லூரியில் படிக்க வைப்பதற்காக மாட்டு

வண்டியில் அனுப்புவது, திருமணம் செய்ய பெண் வீட்டில் எதிர்ப்பதால் பெண்ணைக் கடத்த வண்டியைப் பயன்படுத்துவது என நாவல் மாட்டு வண்டிலை நாவலின் ஒரு பகுதியாகவே பயன்படுத்தியுள்ளமையை அறியலாம். இதேப் போன்று சிறுகதை, கும்மிப்பாடல்களில் மாட்டு வண்டில் பயன்பாட்டைப் பதிவு செய்திருப்பதை இவ்வியல் எடுத்துரைக்கின்றது. பழமொழிகளிலும் மரபுத்தொடர்களிலும் மாட்டு வண்டில் குறித்த முன்னோர்களின் சொற்கள் உள்ளன. அவற்றையும் இவ்வியலில் பதிவு செய்துள்ளார். மிக முக்கியமாக பின்னிணைப்பில் சொல் வழக்குகளை வரிசைப்படுத்தியுள்ளார் அதனை இப்பகுதியில் படத்துடன் விளக்கியிருப்பது சிறப்பாக அமைந்துள்ளது.

இயல் – 3: யாழ்ப்பாணப் பகுதி மாட்டு வண்டிலின் பண்புகள்

இயல் 3 இந்நூலின் மையக் கருத்தான வண்டிலைப் பற்றிய முழுமையான தகவல்களைத் தரக்கூடியப் பகுதியாக இவ்வியல் அமைந்துள்ளது. இதில் தோற்றமும் வரலாற்றுப் பதிவும், மாட்டு வண்டிலும் – வகைகள், மாடுகளும் அதன் வகைகளும், வண்டில் தொழில் நுட்பம் என்ற நான்கு பகுதிகளும் விரித்துரைக்கப்பட்டுள்ளன.

“தோற்றமும் வரலாற்றுப் பதிவும்” என்ற பகுதியில் வண்டில் மாடு, மாட்டு வண்டில் என இரண்டு விதமாக கிராமங்களில் பயன்படுத்துவது தொடங்கி

வண்டில்மாடு வைத்திருப்பவன், வண்டிற்காரன் என யாழ்ப்பாண கிராமங்களில் அழைக்கப்படும் முறையினை அறிமுகமாகக் கொடுத்திருக்கிறார். திருக்குறள், நாலடியார், பெரும்பாணாற்றுப்படை, கம்பராமாயணம் சூழ்ச்சிப்படலம் ஆகிய இலக்கியங்களில் வண்டிலின் பயன்பாட்டினை பதிவு செய்திருக்கின்றன என்பதைச் சான்றுகளுடன் விளக்கியிருக்கின்றார். அடுத்ததாக யாழ்ப்பாணத்து வாழ்வில் – பண்பாட்டில் வண்டிலின் தொன்மை அதன் வரலாற்றினை எவ்வாறு அறிந்து கொள்வது என்பதனை தனக்குள் எழுந்த வினாவாக வைத்துக் கொண்டு அதற்கானச் சான்றுகளாக, தொல்லியல் பதிவுகளை எடுத்துக் கொள்கின்றார். "இலங்கையில் வாழ்ந்த இயக்கர், நாகர் வரலாற்றோடு தொடர்புடையதென்றும், வேறொரு வகையினர் மெசப்பொத்தேமியாவில் இருந்து கேரளாவிற்கும், கேரளாவில் இருந்து நேரடியாகப் புவியியல் தொடர்புகளினால் யாழ்ப்பாணத்திற்கும் பரவியிருக்கலாம்"(ப.38) என்பதை எடுத்துக் கூறுகின்றார். சக்கரம் அதன் பயன்பாடு குறித்த தகவல்களைக் கலைக்களஞ்சியத்தில் இருந்தும் தேர் பயன்பாட்டில் இருந்ததை வேதங்களிலும் வால்மீகி இராமாயணத்திலும் சான்றுகள் வழி விளக்குகின்றார்.

"கந்தரோடையில் மீட்டெடுக்கப்பட்ட எலும்பு ஒன்றில் எருதின் படமும் அமைந்திருக்கின்றது. கந்தரோடை அகழ்வாராய்ச்சிகள் யாழ்ப்பாணத்தில் நிலவிய பெருங்கற்காலப் பண்பாட்டை எடுத்துக்

காட்டியது."(ப.39) எனப் பல சான்றுகளைக் குறிப்பிடுகிறார். இப்பகுதியினை வாசித்தால் இன்னும் பல கருத்துக்களைப் பெற இயலும். நான் யாழ்ப்பாணத்திற்குச் சென்ற மாதம் பயணம் சென்றிருந்த போது கொக்குவில், கோண்டாவில் என பல இடங்களும் 'வில்' என முடிவதாக இருந்தது. அப்போது அப்பகுதி அப்படி அழைக்கப்பட்டதற்கான காரணம் எனக்குத் தெரியவில்லை.

அருள்சந்திரன் இந்நூலில் கூறியுள்ள கருத்து சற்று சிந்திக்கத் தோன்றுகிறது. "இலங்கையின் பண்டைய காலக் கல்வெட்டுக்களும் பாளி இலக்கியங்களும் 'வில்' என முடியும் புராதன இடப்பெயர்கள் பற்றிக் குறிப்பிடுகின்றன. பேராசிரியர் பரமசிவம் 'வில்' என்ற இடப்பெயரிலிருந்தே வில்லு வண்டில் வந்ததாகக் குறிப்பிடுகின்றார்"(ப.40) இப்பகுதியை வாசித்த போது இப்படியும் காரணப்பெயர் அமைந்திருக்கலாம் என்று எண்ணத் தோன்றியது. வரலாற்றுச் சான்றுகளின்வழி இப்பகுதி விரித்துரைக்கப்பட்டுள்ளது.

மாட்டு வண்டிலும் – வகைகள்:

எண்பது வருடங்களுக்கு முன்பு யாழ்ப்பாணத்தவர் வாழ்வில் சமூகப் பொருளாதாரத்தில் வண்டில் மிக முக்கியமுடையதாக இருந்தது. ஏனெனில் கமக்காரர்களின் உடைமையாக வண்டில் இருந்தது. (கமக்காரர், கமக்காரன் என்ற சொற்கள் எனக்குப் புதுமையாக இருந்தது. அச்சொல்லுக்கான பொருளைத் தேட வைத்தது.) எட்டு வகையான

வண்டில் யாழ்ப்பாணத்து மக்கள் வாழ்வில் இருந்ததை மிக விளக்கமாகக் கூறுகிறார். பார வண்டில், போக்குவரத்து வண்டில், சவாரி வண்டில், தண்ணீர் வண்டில், மண்ணெய் வண்டில், மிசின் வண்டில், பிரேத வண்டில், ரயர் வண்டில்(டயர் என்பதனை இவர்கள் ரயர் என்றே அழைக்கின்றனர். 'ட' என்பதற்குப் பதிலாக 'ர' என்ற எழுத்தினைப் பயன்படுத்துகின்றனர்.) ஒவ்வொரு வண்டிலின் அமைப்பு மற்றும் பயன்பாடு குறித்து விரித்து எழுதியுள்ளார். இதற்கான படங்கள் பின்னிணைப்பில் உள்ளன. எண் குறிப்புகளை செய்திகளுக்கு அருகே குறிப்பிட்டுள்ளார்.

மாடுகளும் அதன் வகைகளும்:
கமக்காரனின் நண்பனான மாடு தனிமனித பொருளாதார வளர்ச்சிக்குக் காரணமாக அமைந்திருக்கின்றது என்பதனையும் மாட்டிற்கு அவர்கள் இயற்பெயர் மற்றும் காரணப்பெயரிட்டு அழைக்கின்றனர் என்றும் அதனடிப்படையில் மாடுகளை வகைப்படுத்துகின்றனர் என்றும் மாடுகளின் பயன்பாட்டினையும் குறிப்பிடுகின்றார். இயற்பெயரின் அடிப்படையில் நரம்பன் மாடு, கேப்பை, சிந்து, ஜேசி ஆகிய மாடுகளும் காரணப்பெயரின் அடிப்படையில் வடக்கன் மாடு, வன்னியான், இருசாதி அல்லது கலவன் மாடுகளும் அழைக்கப்படுகின்றன. மாடுகளின் அமைப்பினை விளக்கியும் பின்னிணைப்பில் மாடுகளின் படங்களின் வாயிலாகவும் காட்சிப்படுத்துகிறார்.

வண்டில் தொழில் நுட்பம்:

வண்டிலை வடிவமைக்க பல தொழில் நுட்பம் அறிந்த தொழிலாளர்கள் இருக்கின்றனர். ஆசாரியார், கடைச்சல் வேலை செய்வோர், இரும்பு வேலை செய்வோர் என பல தரப்பினர் பங்கு பெறுகின்றனர். இப்பகுதி வண்டில் தொழில் நுட்பம் குறித்தும் வண்டிலின் அமைப்பினை படம் மற்றும் அட்டவணையுடன் விவரிப்பதாக அமைந்துள்ளது.

இயல் – 4: மாட்டு வண்டிலின் பயன்பாடுகள்:

இயந்திர வாகனங்களின் வருகையினால் மாட்டு வண்டிலின் பயன்பாடு குறைந்த போதும் இன்னும் சில குறிப்பிட்ட வேலைகளைச் செய்ய மாட்டு வண்டிலையே பயன்படுத்த வேண்டிய சூழல் உள்ளதனை இப்பகுதி பதிவு செய்கின்றது. மேலும், மாட்டு வண்டிலினைப் பயன்படுத்திய போது இருந்த கூட்டுணர்வு, கூட்டுறவுப் பாலம், பண்பாட்டின் பேணுகை ஆகியவற்றைத் தொலைத்தவர்களாக இருக்கின்றோம் என்பதனை வருத்தத்துடன் பதிவு செய்கிறார். யாழ்ப்பாணத்தவர் வாழ்வியலில் வண்டிலின் பயன்பாட்டைக் கூறும் விதமாக எவற்றிற்கெல்லாம் வண்டில் பயன்படுத்தப்பட்டது என்பதனை வரிசைப்படுத்தி விளக்கியுள்ளார். போக்குவரத்துத் தேவைகளில் வண்டில், கமத்தொழில் நடவடிக்கைகளில் வண்டில், வியாபாரத் தேவைகளில் வண்டில், விளையாட்டுச் செயற்பாடுகளில் வண்டில், சமயச்சடங்குகளில் வண்டில், தொடர்பாடல் சேவைகளில் வண்டில், சமூக

மாற்றங்களில் குறி காட்டியாய் வண்டில் எனப் பல கூறுகளாக எடுத்துக்காட்டியுள்ளார்.

இயல் – 5: இயந்திர பயன்பாட்டுக்குப் பின்னர் மாட்டு வண்டில்

நாகரிக முன்னேற்றத்தால் தொழில் நுட்ப வளர்ச்சியால் இயந்திர வாகனங்களின் வருகையால் மாட்டு வண்டிலின் பயன்பாடு குறைந்ததை இப்பகுதி விளக்குகின்றது. எதனையும் குறைபாடாகக் கூறாமல் அவசரமாகப் பயணிக்க வேண்டிய காலகட்டத்தில் மாட்டு வண்டில் தினசரி பயன்பாட்டிற்குப் பயன்படாமல் போனது. ஆனால் முன்னோர்களின் நினைவாகவும் கிராமப்புறங்களில் ஒரு சிலர் இன்னும் பயன்படுத்துபவர்களாகவும் இருக்கின்றனர். வில்லு வண்டிகள் இன்னும் காட்சிப்பொருளாகப் பல இடங்களில் பாதுகாக்கப்படுகின்றன. வண்டிலை ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் மாற்றுத் தொழிலைத் தேடக் கூடியவர்களாக மாறினர். மாட்டு வண்டில் பயன்பாடு குறைந்ததனால் ஏற்பட்ட சில நன்மைகளையும் இப்பகுதி கூறுகின்றது. அதில் முக்கியமான ஒன்று பெண்கள் கல்வி கற்க வாய்ப்பு கிடைத்தது. விவசாயக் குடும்பத்தில் இருந்த பெண்களுக்கு முன்பு மாட்டு வண்டிச் சவாரி போட்டி பல ஆண்டுகளாக சிறப்பாக நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. மாட்டு வண்டில் பயன்பாடு குறைந்த போதும் அதனை மீண்டும் பயன்படுத்தி புத்துயிர் கொடுக்கலாம் என இந்நூலாசிரியர் விரும்புகிறார். அதற்குரிய வாய்ப்புகளாக சுற்றுலாப்

பயணிகள் அதிகமாக வரக்கூடிய நேரங்களில் நல்ல மாட்டு வண்டிலை நவீன முறையில் கூடாரமடித்து நல்ல திடகாத்திரமான மாடுகளைப் பயன்படுத்தி சுற்றுலாப் பயணிகளை ஈர்க்க முயலலாம் என்றும் கூறுகிறார். மாற்றத்தை எதிர்நோக்கிக் காத்துக் கொண்டிருக்கிறார்.

பின்னிணைப்பு இந்நூலில் முக்கியத்துவம் பெறுகின்றது. ஏனெனில் மாட்டு வண்டில் தொடர்பான "சொல்" தொகுப்பு சிறப்பாக அமைந்துள்ளது. வண்டிலில் அமைக்க பயன்படுத்தப்படும் அத்தனைப் பொருட்களையும் வரிசைப்படுத்தியுள்ள பகுதி பயனுள்ளதாக அமைந்துள்ளது. அடுத்து 56 வண்ணப்படங்களின் வாயிலாக மாட்டு வண்டில்களின் வகை மற்றும் அமைப்பினை காட்சிப்படுத்தியுள்ளமை சிறப்பு.

# ரிக்வேத சமூகம் - ஒரு பார்வை: நூல் திறனாய்வு

*— முனைவர் க. சுபாஷிணி*




அண்மையில் அருமையான சில நூல்களைத் தமிழ்நாட்டில் இருந்தபோது வாங்கிக் கொள்ள முடிந்தது. சில நூல்களை இனிய நண்பர்கள் பரிசளித்திருந்தார்கள். அவற்றில் சிலவற்றை விரைவாக வாசித்தும் சிலவற்றை ஆழமாக வாசித்துக் கொண்டும் இருக்கின்றேன். அவற்றுள் சிலவற்றை அவ்வப்போது நூல் விமர்சனமாக காண்போமே..

இந்திய தத்துவ உலகில் மட்டுமன்றி சமூகவியல் பார்வையிலும் விவாதப் பொருளாக அமைகின்றவற்றுள் ஆரியம், வேதங்கள் ஆகியவை பெரும் முக்கியத்துவம் பெறுபவை. வேதங்கள், உபநிடதங்கள் அதன் தொடர்ச்சியாக வந்த ஏராளமான புராணங்கள் ஆகியவை இந்திய வழிபாட்டு மரபிலும், வாழ்வியல் கூறுகளிலும் எல்லா தளங்களிலும் ஊடுருவி இன்று பிரித்துக் காண்பது பெரும் சவாலாக இருக்கும் வகையில் அமைந்துள்ளது என்பது உண்மை. இதன் அடிப்படையில் ஆரியம், ஆரியர்கள், ஆரியர் வருகை, ஆரியர் வருகையால் ஏற்பட்ட தாக்கங்கள் ஆகியவற்றை அறிந்து கொள்ள நம்மில் பலர் தொடர்ந்து ஆர்வம் காட்டி வருகின்றோம். அவற்றுக்குப் பதில் அளிக்கும் வகையில் தத்துவ ஆய்வாளர்களும், வரலாற்றாசிரியர்களும் வழங்கிய நூல்கள் பல நமக்கு ஆய்வுத் தகவல்களை வழங்குகின்றன.

வேதங்கள் எனும் போது நான்மறை எனும் சொல் வழக்கு தமிழ் வழிபாட்டுக் கூறுகளில் புதிதல்ல; மாறாக மிக நீண்ட காலமாகவே வழக்கில் இடம்பெற்று வருவது. வேதங்கள் அல்லது நான் மறைகள் என்று குறிப்பிடப்படும் நூல்கள் ரிக் வேதம், யஜூர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் ஆகிய நான்கும் ஆகும். இந்த நான்கு வேதங்களையும் வாசிக்கின்றோமோ இல்லையோ, இவை இறைவனால் அருளப்பட்டவை என்ற எண்ணம்

மட்டும் நம்மில் பலருக்கு ஆழப் பதிந்து போய் இருக்கிறது என்பதை மறுப்பதற்கில்லை.

உலகில் எழுதப்பட்ட நூல்கள் அனைத்துமே மனிதர்களால் உருவாக்கப்பட்டவை தான் என்று அறிவியல் சார்ந்த அறிவு கூறினாலும், ஏதோ ஒரு சக்தி எங்கிருந்தோ சில தகவல்களை அருளிக் கொண்டிருக்கின்றது என்று நம்ப விரும்பும் மனித குலத்தின் ஒரு பிரிவினர் புனிதத் தன்மையை ஏற்றுவதற்காக தங்கள் புனித நூல்களை இறைவன் அருளியவை என்று கூறுவது இயல்பு. அதே நிலை பல ரிஷிகளால் எழுதப்பட்ட வேதங்களுக்கும் அமைந்திருக்கின்றது என்பதைப் புரிந்து கொள்ள வரலாற்றுப் பார்வை தேவைப்படுகின்றது. அத்தகைய ஒரு பணியாக எழுத்தாளர் திரு.சுந்தர சோழன் எழுதிய 'ரிக் வேத சமூகம் ஒரு பார்வை' என்ற நூல் அமைகிறது. இந்த நூல் மிக நுணுக்கமான பல்வேறு கேள்விகளுக்கு விரிவாகவும் தெளிவாகவும் சான்றாதாரங்களுடனும் தகவல்களை வழங்குகிறது.

நூல் வழங்கும் செய்திகளை இனி காண்போம். இந்த நூலில் 11 அத்தியாயங்கள் இருக்கின்றன. இதில் 10 அத்தியாயங்களையும் மூன்று பிரிவுகளாகப் பிரித்துக் கொள்ளலாம் என்றே தோன்றுகிறது.

முதல் பிரிவாக வேதங்கள் பற்றிய பொதுப்பார்வை, வேத நூல்கள் தொகுக்கப்பட்ட, அதன் பின் எழுதப்பட்ட காலங்கள், இந்த வேத நூல்களாகிய ரிக், யஜுர், சாம, அதர்வணம் ஆகிய நான்கும்

இறைவனால் அருளப்பட்டதா அல்லது ரிஷிகளால்/முனிவர்களால் எழுதப்பட்டவையா என்ற கேள்வி, ஆர்யவர்த்தம் என்றால் என்ன? மிலேச்சர்கள் என்றால் யார் அவர்கள் வசிக்கின்ற பகுதி எது, ரிக் வேத சமூகத்தில் பெண்களின் நிலை எவ்வாறு இருந்தது என்ற தேடல் ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

இரண்டாவது பிரிவு ரிக் வேத சமூகத்தில் மதமும் நம்பிக்கைகளும், அரசும் நிர்வாகமும், ஆரிய போர்கள் என்ற வகையில் காணலாம்.

மூன்றாவது பிரிவாக சிந்துவெளி ஹரப்பா நாகரிகம் ஆகியவற்றோடு தொடர்புடைய வகையில் ஹரப்பா நாகரீகம் வேத கலாச்சாரமா? ஆரியர் படையெடுப்பு எனக் கூறுகின்றோமே அது உண்மைதானா அல்லது கற்பனையா என்பதைப் பற்றிய தேடல்.

இந்த மூன்று பெரும் பிரிவுகளுக்கு அடுத்து நூலின் 11ஆம் அத்தியாயம் இந்து மத நம்பிக்கையிலும் அதன் வளர்ச்சியிலும் வேதங்களின் பங்கு எவ்வாறு உள்ளது என்பதை அலசும் வகையில் விரிவான ஒரு பகுதியாக நூலாசிரியர் இந்த நூலின் இறுதிப் பகுதியில் வழங்கி இருக்கின்றார்.

நான்கு வேதங்களில் முதன்மையானது பழமையானது என அறியப்படுவது ரிக் வேதம். ரிக்வேதம் 10 மண்டலங்களில் மொத்தம் 1028 சூக்தங்களைக் (துதிப்பாடல்கள்) கொண்டது. ரிக்

வேத பாடல்கள் பலரால் பல்வேறு காலகட்டங்களில் பாடப்பட்டு அவை ஒருவரால் அல்லது ஒருவருக்கு மேற்பட்டோரால் தொகுக்கப்பட்டு வாய் மொழியாகப் பாதுகாக்கப்பட்டு பின்னர் கி.பி. 10ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் எழுத்து வடிவில் கிடைக்கின்றது. இன்று நமக்குக் கிடைக்கின்ற மிகப்பழமையான எழுத்து வடிவ ரிக் வேதம் கி.பி 14 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது.

வேத காலம் எது என்பதைப் பற்றி நூலின் ஒரு அத்தியாயம் பல்வேறு ஆய்வாளர்களின் கருத்தை அலசிப் பார்த்து கி.மு 1500 இருந்து கி.மு.1000 காலகட்டம் என்பதை நிறுவுகிறது.

பாரசீகர்கள், அதாவது இந்தோ ஈராணியர்களின் புனித நூலாகக் கருதப்படுகின்ற ஜெண்ட் அவஸ்தாவை ரிக் வேதத்தோடு நூலாசிரியர் ஒப்பிடுகின்றார். அவை இரண்டிற்குமிடையே நெருக்கமான சமூகப் பண்பாட்டுத் தொடர்புகள் இருப்பதை நூல் ஆசிரியர் தெளிவுபடுத்துகின்றார். அதில் குறிப்பாக ரிக்வேத ஆரியர்கள் வாழ்ந்த பகுதியை ஆரியவர்த்தம் என்று குறிப்பதையும், பாரசீகர்கள் அவர்கள் வாழ்ந்த பகுதியை 'அர்யனாம் வஜே' எனக் குறிப்பிடுவதையும் சுட்டிக் காட்டுவதோடு வருணன், மித்திரன் போன்ற தேவர்கள் இருவருக்குமே பொதுவான தெய்வங்களாக இருந்ததை இவர்களது வாழ்வியல் கூறுகளில் குதிரை முக்கிய பங்கு வகித்ததையும் சுட்டிக்காட்டுகின்றார். இதற்கு மேலும் வலு சேர்க்கும்

வகையில் 1906-97 ஆம் ஆண்டுகளில் துருக்கியில், போகாஸ் கோய் என்னும் இடத்தில் நடத்தப்பட்ட தொல்லியல் அகழாய்வில் கண்டுபிடிக்கப்பட்ட களிமண் பட்டையில் எழுதப்பட்டிருந்த ஒரு சமாதான ஒப்பந்தத்தின் வாசகங்கள் குறிப்பிடும் தெய்வங்கள் ஆரிய கடவுளர்கள் பற்றிய ஒற்றுமையை விவரிப்பதாக இருக்கின்றது என்பதையும் ஆசிரியர் எடுத்துக் காட்டுகின்றார். இப்படி பல்வேறு சான்றுகளின் ஒப்பீட்டாய்வுகளின் வழி ரிக்வேத கால ஆரியர்கள் இந்தோ ஈராணியர்கள் கூட்டத்திலிருந்து வந்தவர்களாகத்தான் இருந்திருக்க வேண்டும் என்ற கருத்தை முன்வைக்கின்றார்.

ரிக்வேத கால ஆரியர்கள் வாழ்ந்த பகுதி எது என்பதைக் குறிப்பிட்டுச் சொல்ல முடியாத நிலை இருந்தாலும் சப்த சிந்து பிரதேசம், இன்றைய பஞ்சாப், அதன் பின்னர் படிப்படியாக அவர்களின் தொடர்ச்சியான இடப்பெயர்வுகளால் கங்கை நதிக்கரை வரை என்ற நகர்வையும் ஆசிரியர் சுட்டிக் காட்டுவதன் வழி ஆரியர்கள் மிக நீண்ட காலமாக நாடோடிகளாக ஓர் இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குத் தொடர்ச்சியாக இடம்பெயர்ந்து சென்றவர்கள் என்பதை விவரிக்கின்றார்.

ரிக் வேதத்தில் உள்ள பாடல்கள் அனைத்தும் பல்வேறு காலகட்டங்களில் பல்வேறு ரிஷிகளால் பாடப்பட்டு வழி வழியாக வாய்மொழியாகப் பாதுகாக்கப்பட்டவை என்பதை பல்வேறு சான்றுகளுடன் நூல் விளக்குகின்றது. பல்வேறு

தெய்வங்களை வேண்டிப் போற்றி தங்களுக்குக் கால்நடைகளும் குதிரைகளும் தங்கம் உள்ளிட்ட செல்வங்களும் வேண்டும் என வேண்டிக் கொள்ளும் ரிஷிகளின் பாடல்கள், வறுமையை நினைத்து வாடும் பாடல்கள், பெண்ணின் திருமணம், வரதட்சணை, சூதாட்டம், சோமம் போன்றவை இதற்குச் சான்றாகின்றன.

ஆரியர்களுக்கு எதிரானவர்களாக ரிக் வேதப் பாடல்கள் குறிப்பிடுகின்ற தஸ்யூக்கள் பல பாடல்களில் இகழ்ந்து பேசப்படுவதை நூலாசிரியர் சுட்டிக்காட்டுகின்றார். இந்த தஸ்யூக்கள் கருமை நிறமுடையவர்கள் என்றும், அக்னி, இந்திரன் ஆகிய ஆரிய கடவுளர்களை வழிபடாதவர்கள் என்றும், பலியிடுதல் உள்ளிட்ட வழிப்பாட்டு முறையை ஏற்காதவர்கள் என்றும், ரிக் வேதம் போன்ற துதிப் பாடல்கள் இல்லாதவர்கள் என்றும் ரிக் வேத ஆரியர்களைப் போல சடங்குகள் இல்லாதவர்கள் இந்த தஸ்யூக்கள் என்றும் குறிப்பிடுகின்றனர்.

இந்தியாவில் ஆரியர்களுக்கும் ஆரியர் அல்லாத மக்களுக்கும் இடையிலான வேறுபாடு வெறும் மொழி சார்ந்தது மட்டுமல்ல; மத நம்பிக்கைகளும் பண்பாடும் முற்றிலும் மாறுபட்டவையே என்பதை ஆசிரியர் நூலில் எடுத்துக்காட்டுகளுடன் நிறுவுகிறார். ஆரியர்களின் சமஸ்கிருத மொழி பல்வேறு திராவிட மொழி வார்த்தைகளை தனக்குள் உள்வாங்கிக் கொண்டதையும் எடுத்துக்காட்டாக ஆரிய பண்பாட்டில் இல்லாத விவசாயம்

தொடர்பான வார்த்தைகள் திராவிட பண்பாட்டின் முக்கிய தொழிலான விவசாயம் சார்ந்த சொற்களை சமஸ்கிருத மொழி உள்வாங்கிக் கொண்டமை போன்ற மொழியியல் அறிஞர்களின் கருத்தையும் முன்வைக்கின்றார்.

பண்டைய கிரேக்க ரோமானிய வரலாற்றை அறிந்து கொள்ள முயலும் போது மக்களின் வழிபாட்டியல் சார்ந்த சடங்குகளில் ஏராளமான தெய்வங்கள் இடம் பெறுவதை நாம் காண முடியும். ஐரோப்பிய உலகம் கிறிஸ்தவ சமயத்தை ஏற்றுக் கொண்ட பின்னர் இந்தக் கடவுளர்களின் சிலைகள் கலைப் பொருட்களாக, வரலாற்றை நினைவுபடுத்தும் வகையில் அருங்காட்சியகங்களில் அல்லது முக்கிய கட்டிடங்களில், அரசாங்க நிறுவனங்களில், பொதுமக்கள் வந்து செல்லும் பகுதிகளில் காட்சிக்கு வைக்கப்பட்டிருக்கின்றன. வழிபாட்டில் இக்கடவுளர்கள் இன்று இல்லையென்றாலும் அந்த பிரம்மாண்ட வடிவம் கொண்ட சிலைகளை நாம் பார்த்து ரசிக்க முடியும். ரிக்வேத கால ஆரியர்களின் வழிபாடுகளும் இதே போல ஏராளமான தெய்வங்களைப் பற்றி பேசுகின்றன.

வேத கால தெய்வங்களாக நூலாசிரியர் இந்த நூலில் விண்ணுலகத் தெய்வங்கள் 11 பெயர்களையும், காற்று மண்டல தெய்வங்களாக 11 பெயர்களையும், மண்ணுலகத் தெய்வங்களாக 5 பெயர்களையும், சிறு தெய்வங்களாக 6 பெயர்களையும் என கடவுளர்களைப் பட்டியலிட்டு வழங்கி இருக்கின்றார்.

அவர்களது விரிவான குணநலன்கள், தன்மைகள், எதற்காக ரிக் வேத கால ரிஷிகள் அவர்களை வணங்கினார்கள் என்ற எடுத்துக்காட்டுகளோடு வருணன், மித்ரன், சூரியன், விஷ்ணு, இந்திரன், வாயு, பிருதிவி, அக்கினி, பிரகஸ்பதி, சோமன், பிரஜாபதி, எமன், அதிதி, விஸ்வகர்மன், உஷை ஆகியோர் இடம்பெறுகின்றனர். ஒரு குறிப்பிடத்தக்க விஷயம் என்னவென்றால் ரிக் வேத கால கடவுளர்கள் பட்டியலில் உஷை மட்டுமே பெண் தெய்வமாகக் குறிப்பிடப்படுகின்றார்.



பகுதி 5 ரிக் வேத கால கடவுளர்களைப் பற்றிய மிக விரிவான ஒரு பகுதியாக நூலில் இடம் பெறுகின்றது. ஒவ்வொரு கடவுளையும் அவர்கள் எதற்காக வழிபடப்பட்டார்கள் என அறிந்து கொள்ள

விரும்புவோர் நூலின் இப்பகுதியில் வாசித்து அறியலாம்.

ரிக் வேத சமூகத்தில் பெண்களின் நிலையைப் பற்றி விவரிக்கின்ற ஒரு அத்தியாயத்தில் சொத்துரிமை தந்தையிடமிருந்து மகன்களுக்கு மட்டுமே சென்றடைந்தது என்பதையும் ரிக்வேத கால சமூகத் தலைமைத்துவம் ஆண்களிடமே இருந்தது என்பதையும் சில எடுத்துக்காட்டுகளின் வழி அறிய முடிகின்றது. இன்றும் தமிழ்ச் சமூக திருமணங்களில் இடம்பெறுகின்ற சடங்குகளில் திருமணம் முடிகின்ற நிலையில் அக்கினியை வலம் வருகின்ற சடங்கு, அத்தோடு திருமணம் முடித்த பின்னர் மணப்பெண் கணவன் வீட்டுக்குச் செல்லும் வழக்கம் ஆகியவை ஆரியப் பண்பாடுகள் என்பதையும் நூல் விவரிக்கின்றது. தற்கால தமிழ்ச் சமூக நடைமுறையில் இந்த இரண்டு ஆரியச் சடங்குகளும் பிரிக்க முடியாத வகையில் இடம் பெற்றிருப்பது உண்மைதான். தமிழ்ப் பண்பாடு எது, ஆரியப் பண்பாடு எது என்பதைப் பிரித்து அறிந்து கொள்ள முடியாத வகையில் இன்று தமிழ் வாழ்க்கை முறையில் இந்தச் சடங்குகள் கலந்து போயிருக்கின்றன.

நூலின் இறுதிப் பகுதியில் வருகின்ற இரண்டு அத்தியாயங்கள் சிந்துவெளி ஹரப்பா நாகரீகம் திராவிட நாகரிகமே என்பதைப் பல சான்றுகளுடன் நிறுவுகிறது. கால்நடைகள் சார்ந்த ஓர் இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குத்

தொடர்ச்சியாக இடம்பெயர்கின்ற ஒரு சமூகத்தின் வாழ்க்கை நிலையை சிந்து வெளி பண்பாடு வெளிப்படுத்தவில்லை; மாறாக, சிறப்பான முறையில் கட்டப்பட்ட வாழ்விடப் பகுதி, காளை, ஆடுகள் போன்ற பல்வேறு விலங்குகள் பற்றிய செய்திகள், ஹரப்பா மட்டுமின்றி மெசப்பட்டோமியா போன்ற வேற்றுப் பகுதிகளுக்கு வணிகம் செய்யப்பட்ட செய்திகள் ஆகியவற்றை வெளிப்படுத்துகின்ற அகழாய்வுச் செய்திகள் ஹரப்பா நாகரிகம் ரிக் வேத கால ஆரியர்களின் பண்பாட்டில் இருந்து முற்றிலும் வேறுபட்ட ஒரு பண்பாடு என்பதை உறுதிப்பட நிறுவுவதை ஆசிரியர் குறிப்பிடுகின்றார். ரிக் வேத கால ஆரியர்களின் வாழ்வில் குதிரைக்கு முக்கியத்துவம் இருந்தது; ஆனால் ஹரப்பா நாகரிகத்தில் ஒற்றைக் கொம்புடைய எருதுக்கு மிகப்பெரிய முக்கியத்துவம் இருந்தது என்பதை உறுதி செய்யும் வகையில் சிந்து சமவெளிப் பகுதியில் இதுவரை கிடைத்த 1524 விலங்கு உருவம் கொண்ட முத்திரைகளில் 1150 முத்திரைகள் இந்த ஒற்றை கொம்புடைய எருதுக்கு உரியது என்பது குறிப்பிடத்தக்கது.

ஹரப்பா நாகரிகம் என்பது ஆரிய வேத நாகரிகம் தான் என்பதை நிறுவுவதற்காக ஆய்வுலகத்தில் மேற்கொள்ளப்பட்ட சில பொய்யான முயற்சிகளைப் பற்றியும் ஆசிரியர் நூலில் விவரிக்கின்றார். ஹரப்பா நாகரிகம் முடிவுக்கு வந்ததற்கான காரணங்கள் ஆரியர்களது தாக்கத்தால் மட்டுமே அல்ல என்றும் அப்பகுதியில் நிகழ்ந்த இயற்கை

மாற்றங்கள் அங்கு வாழ்ந்த மக்கள் தென்னிந்தியப் பகுதியை நோக்கி வருவதற்கு முக்கிய காரணமாக அமைந்திருக்கலாம் என்பதையும் தனது கருத்தாக நூலாசிரியர் பதிகின்றார்.

நூலின் இறுதிப் பகுதி ரிக் வேத கால பண்பாடும் வழிபாட்டு முறைகளும் எவ்வகையில் அதன் தாக்கத்தை இன்றைய இந்து சமயத்தில் கொண்டிருக்கின்றது என்பதை அலசுகின்றது. ரிக் வேத காலத்தில் கோபம் கொண்ட தன்மையுடன் கூடிய ஒரு சிறு கடவுளாகக் காட்டப்படும் ருத்ரன் அடுத்தடுத்து சாந்தம் கொண்டவனாகவும், பிறகு கால மாற்றத்தில் அனைத்து உலகங்களையும் படைத்துக் காக்கும் கடவுளாகவும் உபநிடதங்களில் வளர்ச்சி அடைந்த போக்கையும் நூலில் காண்கின்றோம். ரிக்வேத காலத்தில் மிகுந்த முக்கியத்துவம் பெற்றிருந்த அக்னி, இந்திரன், வருணன் ஆகிய கடவுள்கள் தங்களது முக்கியத்துவம் அழிந்து மறைந்து போயினர் அல்லது இவர்களது பண்புகள் ருத்ரனுக்கு வழங்கப்பட்டன எனலாம்.

பிற்கால இந்து மதத்தின் மற்றொரு முக்கிய கடவுளான விஷ்ணுவும் ரிக் வேத காலத்தில் சிறிய கடவுளாக அறியப்படுகின்றார். விஷ்ணுவை விட அதிக முக்கியமாகக் கருதப்பட்ட பிரஜாபதிக்கு உரிய தன்மைகள் விஷ்ணுவுக்கு ஏற்றப்பட்டு விஷ்ணுவின் அவதாரங்களாகப் புனைகதைகளாக உருவாக்கம் கண்டன. பிரஜாபதி மறைந்து போனார். புராணங்கள் விஷ்ணுவின் தன்மையில் மேலும்

விரிவாக்கத்தை ஏற்படுத்தின; மேலும் பகவத்கீதை மகாபாரதத்தின் ஒரு பகுதியாக விஷ்ணு, நாராயணன், வசுதேவ கிருஷ்ணன் போன்றவற்றின் இணக்கமான கலவையாகக் கிருஷ்ணனை இந்தியாவின் தனிப் பெரும் கடவுளாக நிலை நிறுத்துவதில் வெற்றி கண்டது என்பதை படிப்படியாக நூலாசிரியர் எடுத்துக்காட்டுகளுடன் குறிப்பிடுகின்றார்.

கால மாற்றத்தில் ஏராளமான பெரிய கடவுள்கள் அவர்களது முக்கியத்துவத்தை இழக்க, ருத்ரன் சிவனாகவும், விஷ்ணு கிருஷ்ணனாகவும் பல்வேறு அவதாரங்களாகவும் இந்தியச் சமூக நிலையில் பண்பாட்டு மாற்றம் நிகழ்ந்தது. இதன் அடிப்படையில் இந்திரன் உள்ளிட்ட கடவுளர்களுக்கு வழங்கப்பட்ட பலி கொடுத்தல் என்பது தேவையற்றதாகிவிட மாறுபட்ட வடிவத்தில் யாகச் சடங்குகள் இந்தியப் பண்பாட்டுத் தளத்தில் இன்றும் தொடர்கின்றன. இந்த வளர்ச்சியில் இந்து மதம், காலத்திற்கு ஒவ்வாததாக ஆகிப்போன சடங்குகள் சம்பிரதாயங்கள் போன்றவற்றில் இருந்து தன்னை மீட்டு அதனை விஷ்ணு எனும் ஏக இறைவனின் மீதான சரணாகதி என்னும் புதிய நம்பிக்கை வழி சேர்ப்பதையே முக்கிய நோக்கங்களில் ஒன்றாக மாற்றிக் கொண்டது என்கிறார் நூலாசிரியர்.

வர்ணாசிரம அமைப்பு என்பது ரிக் வேத காலத்தின் பிற்பகுதியில் வடிவம் பெறத் தொடங்கி இறுக்கமான சாதி அமைப்பாக அது உருப் பெற்ற காலத்தில்

நிகழ்ந்தது. ரிக்வேத கால ஆரியர்கள் தொடர்ச்சியாக தங்களது வாழ்விடங்களை மாற்றிக் கொண்டே செல்லும் பொழுது அவர்கள் ஏனைய இனக் குழுவினரை எதிர் கொள்ள வேண்டிய சூழலில் ஏற்பட்ட இயல்பான மாற்றங்களை உட்புகுத்தும் வகையில் இறுக்கமான சாதி அமைப்பாக உருப் பெறத் தொடங்கி தங்களைத் தனித்து உயர்த்திக் கொள்ள இறுக்கமான சாதி அமைப்பாகச் சாதிகள் உருவாக்கம் கண்டன.

ரிக் வேத காலத்திற்குப் பிற்காலத்தில் தோன்றிய உபநிடதங்கள், புராணங்கள், காவியங்கள் அனைத்தும் தங்களது கருத்துக்கள் வேதத்தின் கருப்பொருளை ஒட்டி அமைந்தவை என்று கூறுகின்றன. வேதங்களில் கூறப்பட்டவை நிரந்தரமான உண்மைகள் என இவை குறிப்பிடுகின்றன. அந்த வகையில் வேதங்களின் மேலான அதிகாரத்தை ஏற்றுக் கொண்ட அனைத்தும் வைதீக தத்துவங்கள் என்றும் அதற்கு எதிரானவை வேத மறுப்பு தத்துவங்கள் என்றும் பிரித்துக் காணப்படுவது இந்தியத் தத்துவ மரபாக அமைகிறது.

ரிக் வேத காலத்தில் இருந்த விரிவான சடங்குகளும் பலி கொடுத்தல் போன்றவையும் மறைந்து படிப்படியாக உருவ வழிபாடும் கோயில் வழிபாடும் இந்து மத வளர்ச்சிப்போக்கில் மாற்றம் கண்டுவிட்டன. பௌத்தம் சமணம் போன்ற நெறிகளின் கூறுகளில் பலவற்றை உள்வாங்கிய

வகையிலும், பலவேறு பழங்குடியினரின் மரபுகளில் சிலவற்றை உள்வாங்கிய தன்மையுடனும் பல்வேறு சிந்தனை போக்குகளின் முரண்பாடுகளாக நிகழ்காலத்தில் இது அமைந்திருக்கின்றது. வைதீக தத்துவங்களின் அடிப்படை கொள்கையானது வேதங்களை மிக உயர்ந்த அதிகாரத்தைக் கொண்டவை என்பதை முழுமையாக நம்புவதே. அவற்றுள் மிகப் பழமையான ரிக் வேதம் இதில் மிக உயர்ந்த முக்கியத்துவம் பெறுகின்ற ஒன்றாகவே உள்ளது.

ஆழமான ஆய்வுகளையும் நெடிய வாசிப்பையும் உள்ளடக்கிய ஒரு நூல். ஆசிரியருக்கு நல்வாழ்த்துகள்!

-சுபா
28.6.2023

நூல்: ரிக்வேத சமூகம் - ஒரு பார்வை
நூலாசிரியர்: சுந்தர சோழன்
பதிப்பு: பொன்னுலகம் புத்தக நிலையம்
பக்கம்: 344
விலை: 330/-ரூ
http://www.ponnulagam.com

# தமிழகத்தில் பௌத்தம்: நூல் திறனாய்வு

*— முனைவர் ஜம்புலிங்கம்*




முனைவர் தேமொழி எழுதியுள்ள தமிழகத்தில் பௌத்தம் என்னும் நூல் ஐந்து தலைப்புகளைக் கொண்டு அமைந்துள்ளது.

புத்தரின் திருவுருவத் தோற்றம் (பக்.14-33), தமிழ்நாட்டுப் பௌத்த சிற்பங்கள் (பக்.34-44) என்ற தலைப்பின்கீழ் உள்ள கட்டுரைகளில் கலையியல் நோக்கில் புத்தரின் சிற்பங்களைப் பற்றியும், சிலைகளைப் பற்றியும் விவாதிக்கப்பட்டுள்ளது. முக்கோற்பவர் (பக்.45-59) கட்டுரை முக்கோற்பவர்

பற்றிய அறிமுகத்தைத் தருகிறது. புத்ததத்தர் வழங்கும் வரலாற்றுக்குறிப்புகள் (பக்.60-79) என்ற கட்டுரை தமிழக வரலாற்றை அறிவதில் அளிக்கும் பங்கினை அளிக்கிறது. எண்குணத்தான் (பக்.60-91) எண்வகைப்பட்ட குணங்களை பலவித சான்றுகளுடன் அணுகுகிறது. இந்நூலிலிருந்து சில பகுதிகளைக் காண்போம்.

"தொடக்க கால இந்தியக்கலையில் (பொ.ஆ.ஒன்றாம் நூற்றாண்டிற்கு முன்) புத்தர் மனித வடிவில் சித்தரிக்கப்படவில்லை. குறியீடுகளாக மட்டுமே சித்தரிக்கப்பட்டுள்ளார்." (ப.14) "கனிஷ்கர் காலத்தில்தான் மகாயான புத்த சமயத்தில் உருவ வழிபாடு தோன்றுகிறது....புத்தரின் முதல் சிற்பம் கனிஷ்கர் காலத்தில் உருவாக்கப்பட்டது." (ப.23) "சிந்து சமவெளிக்கு அப்பால் வளர்ந்த காந்தார புத்த சிற்பங்களுக்கு இணையாகவே கங்கைச்சமவெளி அருகில் மதுராவிலும் புத்த சிற்பங்கள் உருவாயின."(ப.25) "மதுரா வடிவங்களிலிருந்து ஐந்தாம் நூற்றாண்டு வாக்கில் வளர்ச்சியின் உச்சக்கட்டமாக குப்த வடிவங்கள் தோன்றிப் பின்னர் குப்த வடிவமே அஜந்தா எல்லோரா, அமராவதி நாகார்ஜுனகொண்டா, காஞ்சி நாகப்பட்டினம் என இந்தியாவின் பிற பகுதிகளிலும் கிழக்கு ஆசிய மற்றும் தென் கிழக்கு ஆசிய நாடுகள்.... உள்ளிட்ட நாடுகளில் உருவான வடிவங்களுக்கும் அடித்தளமாக அமைந்தன." (ப.27)

"தமிழறிஞர் மயிலை சீனி.வேங்கடசாமி அவர்களின் நூல் (1940) முதற்கொண்டு தொடர்ந்து பல பௌத்த ஆய்வாளர்கள் குறிப்பிட்ட புத்தர் சிலைகள் வரை யாவற்றையும் தொகுத்து சென்ற நூற்றாண்டின் இறுதியில் வெளியிடப்பட்ட தமிழ்நாட்டு வரலாறு சோழப்பெருவேந்தர் காலம் என்ற நூலில் பட்டியலிடப்பட்டுள்ளது."(ப.34) "சில புத்தர் சிலைகள் குறிப்பாக அரியலூர் மாவட்டத்தின் கீழக்கொளத்தூர், அரியலூர்.. ஆகிய இடங்களில் கிடைத்த புத்தர் சிற்பங்கள் கங்கைகொண்டசோழபுரம் அருங்காட்சியகத்தில் காட்சிப்படுத்தப்பட்டாலும் பெரம்பலூர் புத்தர் சிலைகள் பல பொதுவெளியில் பாதுகாப்பின்றி உள்ளன என்பது தொல்லியல் ஆய்வாளர்களின் கவலை."(ப.42)

"கலித்தொகையில் முக்கோற்பவர் குறித்து விவரிக்கும் பாடல் ஒன்று உண்டு."(ப.45) "முக்கோல் குறித்துத் தமிழின் தொன்மையான நூலை எழுதிய தொல்காப்பியரும் அந்தணர்க்குரியவை எவை என்பதைக் குறிப்பிடுகையில் ஒரு நூற்பாவில் சுட்டுகிறார்."(ப.48) "தொல்காப்பியம் குறிப்பிடுவது போல அந்தணர்கள்/துறவிகள் முக்கோல் ஏந்துவர் என்பது வழக்கம்." (ப.52) "துறவிகள் அவ்வாறு முக்கோல் அமைப்பைத் தங்களுடன் எடுத்துச்சென்ற நோக்கம் என்ன என்பதற்கான சான்றுகள் சிற்பங்களிலோ ஓவியங்களிலோ கிடைத்ததாகத் தெரியவில்லை, அதாவது பௌத்த சிற்பங்களைத் தவிர."(ப.54)

"விநயவிநிச்சயம் என்ற நூலின் முடிவுரையில் புத்ததத்தர் அந்த நூலை அவர் பூதமங்கலத்தில் தங்கியிருந்தபொழுது எழுதியதாகக் குறிப்பிடுகிறார்."(ப.64) "ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த புத்ததத்தர் அவர் காலத்தில் தமிழகம் முழுவதும் ஆண்டதாகக் களப்பிர மன்னன் என அச்சுத விக்கந்தனைக் குறிப்பிடுகிறார்."(ப.67) "புத்ததத்தர் காலமான ஐந்தாம் நூற்றாண்டில் காவிரிப்பூம்பட்டினம் சிறப்புற்று விளங்கியதையும் அதன் பின்னரே கடல்கோளால் கொள்ளப்பட்டதாக மணிமேகலையின் பதிவு காட்டுவதாகவும் கணிக்கலாம்."(ப.70)

"எண்குணத்தான் என்ற பொருள் குறித்து மட்டும் அறியமுற்படுவது இக்கட்டுரையின் நோக்கம்."(ப.80) "...எட்டு பண்புகளைக் கொண்டவரும் துறவியுமான புத்தர் எண்குணத்தான் என அழைக்கப்படுவதற்குப் பொருத்தமானவர்."(ப.90) "திருக்குறள் முதல் அதிகாரத்தின் பத்து குறள்கள் காட்டும் பண்புகள், குறிப்பாக எண்குணத்தான் என்பது புத்தரை குறிக்கப்படும் ஒரு விளக்கமாகத் தரப்பட்டால், அந்த விளக்கம் ஏற்றுக்கொள்ளக்கூடியது என்பதுடன் மிகப்பொருத்தமானதாக இருக்கும்."(ப.90)

ஒட்டுமொத்த நூலையும் வாசிக்கும்போது முழுமையாக பல புதிய செய்திகளைக் காணலாம். நூலாசிரியர் பல இடங்களில் என் ஆய்வினை மேற்கோளாகச் சுட்டியுள்ளதைக் காணமுடிந்தது.

உரிய இடங்களில் ஒளிப்படங்களும், மேற்கோள் சான்றுகளும் தரப்பட்டுள்ளன.

தமிழகத்தில் பௌத்தம் என்பதை பல்வேறு பொருண்மைகளில் நோக்குகின்ற நூலாசிரியரின் முயற்சி போற்றத்தக்கதாகும். அவருக்கும், பதிப்பித்த தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பிற்கும் என்னுடைய மனம் நிறைந்த வாழ்த்துகள்.

தமிழகத்தில் பௌத்தம்
முனைவர் தேமொழி
முதல் பதிப்பு -2023
ISBN: 9788196263614
பக்கங்கள்: 98
விலை: ரூ. 120

குறிப்பு: நூலை வாங்க விரும்புவோர் இணையம் வழி பெறலாம்: -
https://www.commonfolks.in/books/d/tamilagathil-bautham

# அண்மையில் வெளியான அயலகத் தொல்லியல் செய்திகள்

— *முனைவர் க. சுபாஷிணி*

தூத்தான்காமூனின் முகத்தோற்றம் கண்டறியும் முயற்சி:



உலக தொல்லியல் அகழாய்வுகளில் சிறப்பிடம் பெறுகின்ற அகழாய்வுகளில் ஒன்று எகிப்தின் இளம் ஃபாரோ தூத்தான்காமூனின் ஈமச்சடங்கு கல்லறையும் மம்மியும். தங்க முலாம்பூசப்பட்ட பெட்டியில் தங்கத்தாலான ஏராளமான பரிசுப்பொருட்களுடனும் தேருடனும் தங்கத்தால் போர்த்தப்பட்ட முகமூடியுடன் மம்மியாக்கப்பட்ட தூத்தான்காமூனின் உடல் கண்டுபிடிக்கப்பட்டபோது

இறந்த சமயத்தில் அவனது முகத்தோற்றம் எவ்வாறு இருந்திருக்கும் எனத் தெரியாமல் இருந்தது.



ஆனால் இப்போது தொழில்நுட்பம் அம்முகத்தை அடையாளம் காண வாய்ப்பைத் தந்துள்ளது. இந்த புகைப்படத்தில் உள்ள 3டி வடிவம் கி.மு 1323 காலகட்டத்தில் இறந்து போன தூத்தான்காமூனின் முகத்தைக் காட்டுகிறது. பேரரசன் அக்னதோன் மறைந்த பின்னர் அவனது மகன் 9 வயதே நிரம்பிய தூத்தான்காமுன் மன்னராக முடிசூட்டப்பட்டான். ஆனால் அவனும் ஆட்சிக்கு வந்த 10 ஆண்டுகளில் இறந்து போனான். அவனது மம்மியின் மீது மேற்கொள்ளப்பட்ட ஆய்வில் அவனது இறப்பு ஒரு கொலையாகவும் இருக்கலாம் என்பது ஆய்வாளர்களின் கருத்தாகவும் உள்ளது .

கம்பியூட்டர் டோமோக்ராஃபி வழி தூத்தான்காமூனின் முகப்பகுதி ஸ்கேன் செய்யப்பட்டு க்ராஃபிக்ஸ் மென்பொருள்

தொழில்நுட்பம் வழி தூத்தான்காமூனின் முகம் அடையாளப்படுத்தப்பட்டுள்ளது. ஆண்டுகள் பல கடந்தாலும் இறந்தவர் முகங்களை அடையாளம் காண தொழில்நுட்பம் இன்று வாய்ப்பளிக்கின்றது.

நன்றி:
https://www.archaeology.org/news/11492-230608-tutankhamun-facial-approximation

******

## நெதர்லாந்தில் 4000 ஆண்டு பழமையான ஈமக்கிரியை கல்வட்டம்

ஐரோப்பிய நாடுகளில் ஒன்றான நெதர்லாந்தின் ஹாக் எனும் நகருக்கு 72 கிமீ தூரத்தில் உள்ள டீல் (Tiel) என்ற இடத்தில் டச்சு தொல்லியல் ஆய்வறிஞர்களால் தொல்லியல் அகழாய்வு 2017ஆம் ஆண்டு நடத்தப்பட்டது. தொடர்ந்து இப்பகுதியில் நிகழ்த்தப்பட்ட ஆய்வில் இங்கு தொன்மை வாய்ந்த கல்திட்டை உருவாக்கப்பட்டு இறந்தோருக்கு மரியாதை செய்யும் வகையில் மணல் குன்று அமைக்கப்பட்டு அப்பகுதியில் வழிபாடுகளும் பூசைகளும் சடங்குகளும் செய்யப்பட்டன என்பது இவ்வாய்வில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

ஈமக்கிரியைச் சடங்குகள் நிகழ்த்தப்பட்டுள்ள மணல் குன்று பகுதியில் 60 மனித எலும்பின் எச்சங்கள் (ஆண்கள், பெண்கள், குழந்தைகள்) அகழாய்வில் கண்டுபிடிக்கப்பட்டு அவை

ஆய்வுக்குட்படுத்தப்பட்டன. அன்றைய காலகட்டத்தில் ஏறக்குறைய 800 ஆண்டுகள் இங்கு வாழ்ந்த மக்களால் ஒரு புனிதமான பகுதியாக இது அடையாளப்படுத்தப்பட்டிருந்தது.



A view shows the 4,000-year-old Stonehenge-like sanctuary discovered in Tiel    Image: MUNICIPALITY OF TIEL/REUTERS

தொன்மையான சமூகங்களில் ஈமக்கிரியைச் சடங்குகள் நிகழ்த்தப்படுவதை உலகம் முழுவதும் கிடைக்கின்ற சான்றுகளின் வழி அறியமுடிகின்றது. அந்த வகையில் நெதர்லாந்தில் கண்டுபிடிக்கப்பட்ட மிகத் தொன்மையானதொரு இறந்தோருக்கான சடங்குகள் நிகழ்த்தப்பட்ட இடமாக இதனைக் குறிப்பிடலாம்.

இங்கு நிகழ்த்தப்பட்ட அகழாய்வில் ஏறக்குறைய 1 மில்லியன் அரும்பொருட்கள் கண்டெடுக்கப்பட்டன. அவை ஆய்வுக்குட்படுத்தப்பட்டன. வெவ்வேறு காலகட்டத்தைச் சேர்ந்த அரும்பொருட்கள் இங்கு கண்டெடுக்கப்பட்டுள்ளன. அவற்றுள் கிமு.2500 ஆண்டுக்கால பொருட்களும் அடங்கும் என்பதோடு இன்றைக்கு 1000ஆண்டுக் கால கண்ணாடி

மணிகளும் அடங்கும் என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது. இந்த கண்ணாடி மணிகள் அன்றைய மெசபடோமியா, அதாவது இன்றைய ஈராக் நாட்டிலிருந்து வந்தவை என்பதும் ஆய்வில் தெரியவந்துள்ளது.இப்பகுதியில் 1 பெரிய மணல் குன்றும் அருகே மேலும் 2 சிறிய மணல் குன்றுகளும் ஆய்வுக்குட்படுத்தப்பட்டன.




குறிப்பு: இங்கு இணைக்கப்பட்டுள்ள படம் அன்று இப்பகுதி எவ்வாறு இருந்திருக்கலாம் என்பதை இங்கு கிடைக்கப்பெற்ற சான்றுகளின் அடிப்படையில் கணினி வழி உருவாக்கப்பட்டதாகும்.

நன்றி:
https://www.dw.com/en/dutch-archaeologists-find-4000-year-old-shrine/a-65996139
https://www.theguardian.com/world/2023/jun/21/archaeologists-unearth-stonehenge-netherlands

# வடமொழியில் திராவிடச் சொற்கள்

*— முனைவர் ஔவை அருள்*

ஒரே நாட்டில் திராவிட இனமும், ஆரிய இனமும் பல நூற்றாண்டுகளாக, அடுத்தடுத்து வாழ்ந்திருந்தமையால், திராவிட மொழிகள் தமிழல்லாத பிற மொழிகள் ஆரியச் சொற்களைப் பேரளவு கடன் வாங்கியுள்ளன. அதே நிலையில் திராவிடத்திலிருந்து கடன் வாங்க ஆரியமும் தயங்கவில்லை என்பதும் உரத்து ஒலிக்கும் உண்மை. இந்தோ ஐரோப்பிய மொழி ஒலியனாக ஒப்புக் கொள்ளாதவர்கள், திராவிடத்திலிருந்து இது வந்தது என்ற கொள்கையை ஒப்புக் கொள்வர்.

ஆம். என்பதனை 'ஏது' நிகழ்ச்சி எனவும், திருவாணத்தைப் பெரும்பேறு எனவும் தமிழாக்கியுள்ளார். துன்பம் தோற்றம் பற்றே காரணம்... "இந்தோ ஐரோப்பிய இனச் சொற்களின் (Cognates) பொருள்கள் ஒத்தவையாக இல்லையெனின், இங்ஙனம் ஒப்புக் கொள்வதில் தடையேதும் இல்லை. இதிலிருந்து ரிக் வேத காலத்தவரோடு சேர்ந்து திராவிட மொழி பேசுவோர் வாழ்ந்திருந்தனர் என்பது புலனாகிறது எனக் குறிப்பிடும் தெ பொ மீ தமிழில் உள்ள கைதை

என்பது வட மொழியில் 'சைதகா' Kaieaka என வருகிறது. அவ்வாறே தமிழில் உள்ள ஏலம் வடமொழியில் 'ஏலா' (Ela') எனவும், தமிழ் 'மயில்' வடமொழியில் 'மயூர' எனவும், தமிழில் உள்ள 'எறும்புப் புற்று வடமொழியில் 'பத்திக' Puttika) எனவும் உள்ளது. வேத காலத்தும், அதற்குப் பிற்பட்ட காலத்தும் வடமொழியில் திராவிடச் சொற்கள் கலந்துள்ள வாய்ப்பைத் தள்ளிவிட முடியாது என்பது தெளிவாகிறது என்று மொழிக் கலப்பின் தொன்மையை விளக்குகின்றனர்.

தமிழில் உள்ள நீர், மீன் முதலிய சொற்கள் முறையே வட மொழியில் நீர, மீன என வழங்கப்படுகின்றன. இச்சொற்களுக்குப் பதிலாக வேறு சொற்கள் திராவிட மொழிகளில் இல்லை. இவற்றிற்கு இணையாக வேறு சொற்களைப் பயன்படுத்த முடியாது. ஆனால், இச்சொற்களின்றி வேறு சொற்களை வடமொழி பயன்படுத்திக் கொள்ள முடியும். எனவே, அவை திராவிடச் சொற்களே என்று கூறும் திராவிட மொழியறிஞர் கால்டுவெலின் கருத்தும் மொழிக் கலப்பின் தொன்மையை உணர்த்துகிறது.

பேராசிரியர் பிளிக் என்பவர், "பால் வேறுபாடு உணர்த்தும் பிற மொழிகளிலிருந்து, ஆரிய மொழிகள், பால் உணர்த்தா அஃறிணைச் சொற்களைப் பெற்றிருப்பதால், அவை வேறு பிரித்து அறியப்படும். ஆரிய மொழித் தோற்றத்தின்போது, திராவிடச் செல்வாக்கும் ஓரளவு ஆட்சி புரிந்தது

என்பதும் ஒருவகையில் ஏற்புடையதாம். வேறு சில இயல்புகளைப் போலவே, இவ்வஃறிணை ஒருமைப்பாடும் அவ்வாட்சியின் விளைவுகளில் ஒன்றாகும்" என்று கூறினார். அதனை எடுத்துக்காட்டி டாக்டர் கால்டுவெல், "பால் திராவிட மொழிகளிலேயே முறையாகவும் முழு அளவிலும் மேற்கொள்ளப்படுகிறது. இது சம்ஸ்கிருத ஆட்சியின் விளைவாக இருத்தல் இயலாது. மாறாகத் திராவிட ஆட்சியின் பயனாகவே சம்ஸ்கிருதத்திலும் அஃது இடம் பெற்றிருக்கும்" என்றார்.

வடமொழியோடு மட்டுமன்றிச் சிங்களம், பாபிலோனியா, கிரேக்கம் ஆகியவற்றின் மொழிகளோடும் தமிழ்மொழிக் கலப்பு நேர்ந்ததாக மொழி நூலறிஞர்கள் குறித்தனர். சிங்கள மொழியில் வழங்கப்படும் Dramila எனும் சொல், தமிழில் வழங்கும் 'தமிழன்' என்பதன் வடிவமாற்றாக உள்ளது. இலங்கைக் கல்வெட்டுகளில் 'பெருமகன்' முதலான தமிழ்ச் சொற்கள் கலந்துள்ளன. சுமேரியத் தலைநகரான 'ஊர்' என்பதை 'ஊர்' என்னும் தமிழ்ச் சொல்லோடு இணைத்துப் பேசுவர் மொழி நூலறிஞர். மயிலுக்கு ஈப்ரு மொழியில் வழங்கும் 'துகி' என்பது தோகை என்ற தமிழ்ச் சொல்லிலிருந்து பெயர்ந்ததாகக் கால்டுவெலும் பிறரும் கட்டுரைத்தனர். கிரேக்கச் சொல்லான Oruza என்பது தமிழ்ச் சொல்லென புரிந்தது. 'அரிசி' என்பதிலிருந்து வந்ததாகவும் கூறுவதை நாமறிவோம்.

கிரேக்கப் பயணியர் தமிழ்ச் சொல்லான 'தமிழகம்' என்பதை எனத் தம் மொழியில் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு தமிழில் தொன்மைக் காலத்திலேயே தொடங்கிய மொழிக்கலப்பு. இலக்கிய இலக்கணப் படைப்புகளிலும் இடம் பெறலாயிற்று. தொல்காப்பியம் கிறித்து பிறப்புக்கு முற்பட்ட பழந்தமிழ் நூலாகக் கருதப்படுகிறது. இன்றுள்ள தமிழ்நூல்களுள் தொன்மையானதும் தொல்காப்பியமே.

இந்நூலில் உயிரியல், இடையியல், மரபியல் முதலிய பகுதிகளில் அருஞ்சொற்களுக்குத் தொல்காப்பியர் பொருள் விளக்கியுள்ளார். இவருக்கு முற்பட்ட இலக்கியப் பரப்பில் தாம் கண்ட சொல்லாட்சிகளுக்கும் இவர் காலத்துச் சொல்லாட்சிகளுக்கும் வேறுபாடு அமைந்துள்ளது. முந்தைய இலக்கியத்தின் அருஞ்சொற்களைத் தம் காலத்தவருக்கு உணர்த்தக் கருதியே தம் நூலுள் தொல்காப்பியர் ஆங்காங்கே பொருள் விளக்கம் செய்தார்.

தொல்காப்பியத்தில் காணப்படும் அந்தம், மாத்திரை, காயம், கருமம், ஏது, அம்போதரங்கம், குஞ்சரம், வைசியன், வாணிகம் என்பவற்றைச் சான்றுகளாகக் கொண்டு நோக்குகையில், தொல்காப்பியர் காலத்திலேயே பிறமொழிச் சொற்கலப்பு நிகழ்ந்ததை அறியலாம்.

காலம், உலகம், பூதம் (சொல். 58 ) மண்டிலம் (பொருள் 421) சூத்திரம் (640 படலம்) (474) பிண்டம் முதலிய சொற்களையும் பிற மொழிக்கலப்பிற்குச் சான்றுகளாகக் காட்டலாம். இவை மட்டுமின்றி சுண்ணம், வண்ணம், பழைமை,பண்ணத்தி முதலிய பிராகிருதச் சொற்களும் தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளன. தொல்காப்பியத்தில் காணப்படும் வடமொழிச் சொற்கள் என அறிஞர் அநவரத நாயகம், நாற்பத்தொரு சொற்களைப் பட்டியலிட்டார். இச்சொற்களில் காலம், நாடகம், பிண்டம், பலி, பக்கம் பேய் உரு முதலிய சொற்கள் திராவிட மொழிகளில் இருந்து வடமொழி கடன் வாங்கியவை என்று டாக்டர் கிட்டல் தமது 1894ஆம் ஆண்டு தமது கன்னட அகராதியில் குறிப்பிட்டுள்ளார். மீன் என்னும் தமிழ்ச் சொல்லை மீனம் என வடமொழி கொண்டதாகத் தொல்காப்பியச் சொல்லதிகாரம் குறிப்பிடுகிறது.

பாட்டும் தொகையுமான சங்க நூல்களில் பிறமொழிச் சொற்கள் பயின்று வந்துள்ளன. அறுபதுக்கும் மேற்பட்ட பிறமொழிச் சொற்கள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன என்பது அறிஞர் வையாபுரியாரின் கருத்தாகும். திருக்குறளில் 221 வடமொழிச் சொற்கள் உள்ளன. என்று கணக்கிட்டு அவர் மயங்கியது புலவர் உலகத்தால் பழிக்கப்பட்டது. இலக்கியங்களிலும் திருக்குறளிலும் பிறமொழிச் சொற்கள் அருகியே கலந்துள்ளன என்பதை மறுக்க இயலாது. திருக்குறளில் ஆதி, பகவன், பாக்கியம் என்ற

வடமொழிச் சொற்கள் கலந்துள்ளன என்று தெ.பொ.மீயும் குறிப்பிட்டுள்ளார். திருக்குறளில் எடுத்தாளப் பெற்றவை பன்னீராயிரம் சொற்கள் என்றும், அவற்றுள் ஐம்பது கூட வட சொற்கள் இல்லையென்றும் டாக்டர் லாசரஸ் கணக்கிட்டார். இச்சொற்கள் அணி, அந்தம், அமரர், அமிழ்தம், அங்கணம், சாதி, ஆதி ஆகுலம், ஆசாரம், ஆயம், இந்திரன், இலக்கம், கருமம், கணம், காமம், காரணம், குணம், குலம், கோடி, சலம், ஞாலம், தண்டம், தவம், தானம், துலை, தெய்வம், தேயம், தேவர், நரகம், நாகரிகம், பருவம், பாக்கியம், பாகம், பாவம், புருவம், பூதம், மங்கலம், மந்திரி, மதி, மணி, மாத்திரை, மாயம், மானம், முகம், முத்தம், யாமம், வித்தகர். இவற்றுள் முகம், காமம், மணி, மாலை என்பன இருமொழிகளிலும் உள்ள சொற்கள் என மகாவித்துவான். ச.தண்டபாணி தேசிகர் சுட்டிக் காட்டியுள்ளார்.

சைவம், வைணவம், சமணம், பௌத்தம் முதலான சமயங்கள், சிலப்பதிகாரக் காப்பிய மாந்தரொடு தொடர்பு கொண்டன. சமுதாயச் செய்திகளும், சமயச் செய்திகளும், பாத்திரங்கள் வாயிலாகப் பலபடக் கலக்கும்போது, எவ்வளவுதான் அயன்மையை ஒதுக்கிப் பாட நினைத்திருந்தாலும், "நடுவே வீடகத்தே புகுந்திடுவான் மிகப் பெரிதும் விரைகின்றேன்" என்பதற்கு இணங்கக் காப்பியத்திடத்துப் புகுந்து மொழிக்கலப்புக் கால்கொண்டது எனக் காப்பியங்களில் பிறமொழிச் சொற்கள் கலந்த நிலையைப் பற்றி அறிஞர்

வ.சுப.மாணிக்கம் கூறுவது நினைக்கத்தக்கது. 'சகரம்' மொழிக்கு முதலாக வரும் என்று தொல்காப்பியம் உரைக்கவில்லை. சிலப்பதிகாரத்திலோ சகரத்தை மொழி முதலாகக் கொண்ட சடை, சகடு, சண்பகம், சமன், சந்தனம், சந்து, சங்கம், சங்கு, சதுக்கம், சதங்கை, சங்கில, சந்திரபாணி, சலம், சலதி, சந்தி, சரவணம், சக்கரம், சகடம், சந்திர குரு, சமைப்பேன், சரிதை, சமரம், சகோடம், சயந்தன், சங்கரன், சயம்பு, சதுமுகன், சங்கரி, சஞ்சயன், சங்கன் எனப் பல சொற்கள் இடம் பெற்றுள்ளன.

இவ்வாறு மொழிக்குரிய இலக்கண விதிகளையும் கடந்து, சொற்கள் இடம் பெற்றமைக்குப் பிறமொழியின் கலப்புந்துதல் பெருங் காரணமாயிற்று எனலாம். இனி மொழிக் கலப்பிலிருந்து செந்தமிழின் செழுமையைப் பெருக்கப் புதிய சொல்லாக்கங்களை இளங்கோவடிகள் படைத்ததும் கருதத்தக்கது. மாதவத்தாட்டி, குலப்பிறப்பாட்டி, வாய்ச்சி, நகைச்சி, மூதறிவாட்டி, வானநாடி, இயக்கி, தொழிலாட்டி, முதுக்குறைவி, முகத்தி, வாய்த்தி, நகைத்தி போன்ற சொல்லாக்கங்கள் இளங்கோவடிகள் பிறமொழிக் கலப்பைத் தடுக்க முனைந்த முயற்சியின் வெளிப்பாடாகவே உள்ளது.

முனைவர் ஔவை அருள்
இயக்குநர், தமிழ் வளர்ச்சித்துறை, தமிழ்நாடு அரசு
(நன்றி: இராஜகமலம் - மே மாத இதழ் )

# இலக்கியச் சிந்தனை

— *குமரன் சுப்ரமணியன்*

**ஆளும் முறை - ஊறுஇன்றாகி ஆறுஇனிது படுமே**

கால்பார் கோத்து ஞாலத்து இயக்கும்
காவற் சாகாடு உகைப்போன் மாணின்
ஊறுஇன்றாகி ஆறுஇனிது படுமே;
உய்த்தல் தேற்றான் ஆயின் வைகலும்
பகைக்கூழ் அள்ளற் பட்டு
மிகப்பல் திநோய் தலைத்தலைத் தருமே.
- புறநானூறு 185

பாடியவர்: தொண்டைமான் இளந்திரையன்
திணை - பொதுவியல்
துறை - பொருண்மொழிக் காஞ்சி

சங்க இலக்கியம் தமிழர் வாழ்வியலை அழகாக இலக்கண வரையறைகளுக்கு பொதிந்துவைத்த கருவூலம். சங்க இலக்கியப்பாடல்கள் காதல், வீரம், ஈகை, புகழ் மட்டுமல்லாது அறம் முறைமைபற்றியும் பல்வேறு தலைப்புகளை தாங்கிய பாடல்களை கொண்ட களஞ்சியமாக உள்ளது.

உலகை ஆளும்முறையாக தொண்டைமான் இளந்திரையன் எனும் மன்னன் பாடிய புறநானூற்றுப் பாடலின் பொருள் :

வண்டிச் சக்கரமும் (கால்) சட்டமும் (பார்) முறைப்படி இணைத்து அமைக்கப்பட்ட திறன்மிக்க வண்டியும் (சாகாடு) அதனை இயக்குபவன், வண்டியின் திறன், வண்டி செல்லும் நிலத்தின் தன்மை, அதில் வண்டியை செலுத்தும் முறை என நுட்பங்களை அறிந்து பயிற்சியும் தேர்ச்சியும் பெற்றவனாக இருந்தால் மட்டுமே இன்னல்கள் ஏதும் இல்லாமல் பயணம் இனிதாக அமையும் (ஊறுஇன்றி ஆறு இனிதுபடும்).

வண்டியை செலுத்துபவன் தேர்ச்சி இல்லாதவனாக இருந்தால் வண்டி விபத்தில் சிக்கி சீரழிவதோடு வண்டியில் பயணம் செய்வோரும் மிகுந்த துன்பத்தை சந்திக்க நேரும். அதுபோல ஆள்பவன் ஆட்சி புரியும் ஆற்றல் மற்றும் புலமை உடையவனாக இருந்தால் நாடு நலம் பெறும்; அவன் ஆற்றல் அற்றவனாக இருந்தால் பலவகையான துன்பங்கள் வந்து சேரும்.

அழகான உவமையோடு சொல்லப்பட்ட இப்பாடல் ஆள்பவருக்கும் அரசியலுக்கும் மட்டுமல்லாது எல்லாத்துறைக்கும் பொருந்தும்வகையில் உள்ளது சிறப்பு.

> அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
> ஊதியமும் சூழ்ந்து செயல்.

(திருக்குறள்– 461; அதிகாரம் - தெரிந்து செயல் வகை)

# சிந்தனையாளர் வே. ஆனைமுத்து

## — முனைவர் சிவ இளங்கோ, புதுச்சேரி



***வே. ஆனைமுத்து***
***(சூன் 21, 1925 - ஏப்ரல் 6, 2021)***

பெரியாரிய வாதிகளுக்கு இரண்டு சட்டகங்கள் உண்டு. ஒன்று, அவரைக் கடவுள் மறுப்பாளராகக் கண்டு அதைப் பற்றியே பெரிதும் விவாதிப்பது. இரண்டாவது, பெரியாரை ஒரு புனிதராகப் பார்ப்பது. இவை இரண்டும் சேர்ந்து அவரைப் பல இடங்களில் சிலையாக நிறுத்துவதும், புனிதராக வாதிடுவதுமான செயல்கள் அதிகமாகி, பெரியாரியல் கோட்பாடுகளுக்கும், மக்களுக்குமான இடைவெளி அதிகரித்து வந்தது. இந்த இடைவெளியைக் குறைத்து பெரியார் ஒரு சமூக நீதித் தலைவர், போராளி என்னும் சட்டகத்தினுள் அவரை மாட்டி வைத்த பெருமையில் தலையானவர், சிந்தனையாளர் வே. ஆனைமுத்து அவர்கள்.

1969 ஆம் ஆண்டு தமிழ்நாடு முதலமைச்சராக இருந்த அறிஞர் அண்ணா காலமானபோது தமிழகமே

அதிர்ந்தது. தமிழக மக்கள் அண்ணா மீது அளப்பரிய நம்பிக்கை கொண்டிருந்தனர். ஆனால் அவருடைய அகால மரணத்தினால், புகழின் உச்சியில் வைத்துப் போற்றப்பட்ட அண்ணாவுக்குத் தமிழ்நாடெங்கும் சிலைகள் வைத்தனர். அண்ணாவின் பகுத்தறிவு அரசாங்கத்தைப் பெரிதும் புகழ்ந்த தந்தை பெரியார், அண்ணா இறந்த நான்காம் ஆண்டில் காலமான போது, பெரியாருக்கும் பல இடங்களில் சிலைகள் அமைக்கப்பட்டு, ஆராதனைகளும் நடந்தேறின. இந்தச் சமகாலத்தில்தான் ஆனைமுத்து அவர்கள் தொகுத்த "பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள்" மூன்று தொகுதிகள் வெளியாகின. பெரிய அளவில் தரத்திலும், தகுதியிலும் கனமான நூல்களாக அவை இருந்தன.

அதுவரை பெரியாரின் கருத்துகள், அவர் நடத்திய மாத இதழ்களிலும், நாளேடுகளிலும், அவருடைய சுயமரியாதைப் பிரச்சார நிறுவனம் வெளியிட்ட சிறு மலிவுப் பதிப்பு நூல்களிலும் கிடைத்து வந்தன. இந்த நிலைமையில், ஆனைமுத்துவின் தொகுப்பு பெரியார் இதுவரை பேசிய, எழுதிய கருத்துக்களைத் தலைப்பு, தேதி வாரியாகத் தொகுத்துப் பல அரிய வரலாற்றுத் தகவல்கள் மற்றும் திரட்டுகள் அடங்கியதாக வெளிவந்தது. பெரியார் காலத்தில் தொகுக்கத் தொடங்கி, அவர் காலமான பின், 1975 ஆம் ஆண்டு "பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள்" வெளியான பிறகு பெரியாரைப் பன்முகத் தலைப்புகளில், எங்கும் தேடாமல், அவ்வப்போது படித்துத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு பெரியாரியவாதிகளுக்கே அப்போதுதான் ஏற்பட்டது.

ஒரு சமுதாயம் முன்னேற்றமடைய எத்தனை வழிகள் உள்ளனவோ, அத்தனை வழிகளிலும் சிந்தித்துத் தகுந்த கருத்துகளைத் தெரிவித்திருந்த பெரியார், அதற்காகச் சமரசமின்றிப் போராடியவரும் கூட. ஆனைமுத்து பதிப்பித்திருந்த பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள் மூன்று தொகுப்புகளையும் முழுமையாக வாசித்த பிறகுதான், பெரியார் பக்தியிலிருந்து விலகி, பெரியாரின் சிந்தனைகளைச் சமூகநீதித் தலைவனின் தொடர் குரலாக ஒலிக்க முடிந்தது. அதைப் பதிப்பித்ததென்பது ஆகச் சிறந்த சாதனைதான். ஆனால் அத்துடன் நிறுத்தி விடாமல் அப்பணியை மீண்டும் தொடர்ந்து, விடுபட்டுப்போன பெரியாரின் பேச்சுக்கள், எழுத்துக்கள் அத்தனையும் சேர்த்து இருபது தொகுதிகளாக, 2009 ஆம் ஆண்டில் மிகப்பெரிய தொகுப்பாகப் பதிப்பித்தார் ஆனைமுத்து.

இதற்கும் முன்பாக, "பெரியாரின் அயல்நாட்டுப் பயணக் குறிப்புகள்" என்னும் நூலை 1997 இல் பதிப்பித்தார். "தத்துவ விவேசினி" (1882-1888), "சிந்தனையாளன்" (1882-1885) ஆகிய மூடநம்பிக்கை ஒழிப்பு இதழ்களைத் தேடிக் கண்டெடுத்து, புது டெல்லி, நேரு நினைவு அருங்காட்சியகம், சென்னை, ரோஜா முத்தையா ஆய்வு நூலகம் ஆகியவை நுண்படப் பதிவாகச் செய்திடத் துணை நின்றார். அத்திப்பாக்கம் நா. வேங்கடாசலம் அவர்கள் 1882 ஆம் ஆண்டில் வெளியிட்ட "இந்து மத ஆபாச தர்சினி" என்னும் நூலையும் தேடி எடுத்துப் பதிப்பித்தார்.

பெரியாரைப் போலவே அண்ணல் அம்பேத்கரையும் ஆழமாக வாசித்தவர் ஆனைமுத்து. பெரியாரின் வாழ்க்கை வரலாற்றைக் காலவரிசைப்படித் தொகுத்தளித்த ஆனைமுத்து, அதேபோல் தனஞ்செய் கீர் தொகுத்த "டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் வாழ்க்கை வரலாறு" நூலைத் தமிழில் (தமிழாக்கம் க. முகிலன்) 1992 ஆம் ஆண்டில் வெளியிட்டார். தொடர்ந்து, தமிழில் "சிந்தனையாளன்" இதழையும், ஆங்கிலத்தில் "பெரியார் ஈரா" (Periyar Era) என்னும் இதழையும் நடத்தி வந்தார். ஆனைமுத்து பதிப்பித்த நூல்களும், இதழ்களும் கல்வியாளர்களுக்கும், ஆய்வாளர்களுக்கும் அருந் துணையாக விளங்கி வருகின்றன.

"மார்க்சிய அம்பேத்கரிய பெரியாரியப் பொதுவுடமைக் கட்சி" மூலம் மார்க்சிய, பெரியாரிய, அம்பேத்கரிய கொள்கைகளைப் பரப்பி வந்தார் ஆனைமுத்து. சமூக நீதிக்காகச் சட்ட எரிப்புப் போராட்டத்தில் ஈடுபட்டு, 1957 ஆம் ஆண்டில் 18 மாதங்கள் சிறையில் இருந்தார். தொடர்ந்து, பல்வேறு போராட்டங்களை நடத்திப் பிற்படுத்தப்பட்டோருக்கு 50 சதவிகித இட ஒதுக்கீடு கிடைக்கப் பெரும் பங்காற்றினார். தமிழ்நாடு மட்டுமல்லாது உத்தரப்பிரதேசம், பீகார், அசாம், மேற்கு வங்கம், கர்நாடகா, கேரளா ஆகிய மாநிலங்களிலும் சமூக நீதி விழிப்புணர்வுப் பிரசாரப் பயணம் செய்து, அகில இந்திய அளவில் மண்டல் கமிஷன் பரிந்துரைகள் நிறைவேறத் தூண்டுகோலாய் அமைந்தார். இறுதி வரை ஓய்வறியாத உழைப்பும், உண்மையும், நேர்மையும், வாக்குத் தவறாத பண்பும் அவருடைய அடையாளங்கள் ஆகவே மாறிவிட்டன.

சிந்தனையாளர் ஆனைமுத்துவின் உழைப்பும், உறுதியும் அடுத்த தலைமுறையினரின் இலட்சியங்களாக விளங்குவதே, சமூக நீதியின் உயிர்த் துடிப்பாக நிலைத்து நிற்கும்.

**பெரியார் ஈ.வெ.ரா சிந்தனைகள்**
– நூல்கள் இணையத்தில் . . .
https://archive.org/details/@kudi_arasu
தொகுதி 1 [பகுதி 1, 2, 3, 4]
தொகுதி 2 [பகுதி 1, 2, 3]
தொகுதி 3 [பகுதி 1, 2, 3]

# இலங்கை பயணக் குறிப்புகள்

— *முனைவர் மு. பாமா*

இலங்கை பயணத்தில் பார்த்த இடங்கள் ஏராளம், சிந்திக்க வைத்த விஷயங்கள் ஏராளம், எழுத வேண்டிய விஷயங்கள் ஏராளம். நாள் வாரியாக இல்லாமல், எனக்குத் தெரிந்த வகையில் சிறு தலைப்புகளாகப் பிரித்து இருக்கிறேன்.

**புத்தக் கோயில்கள்/புத்த விகாரைகள்:**

கடந்த சில மாதங்களாக முனைவர் சுபா மற்றும் தமிழ் மரபு அறக்கட்டளையின் உறுப்பினர்களுடன் நிறைய கள ஆய்வு சார்ந்த மரபு நடைகளை மேற்கொண்டு வருகிறேன். இந்த பயணங்களில் அமைந்த ஒரு கருப்பொருள் "தமிழகத்தில் பௌத்தம்". நாகப்பட்டினம், வேதாரண்யம், மயிலாடுதுறை பகுதிகளில் நிறைய புத்தர் சிற்பங்களை அங்கு ஒன்றும் இங்கு ஒன்றுமாகப் பார்த்தேன். ஆள் உயர புத்தர் சிலைகளை நிறைய வயல் வழிகளில் பார்த்தேன். அப்போது எனக்கு எழுந்த உணர்வு: " பௌத்தம் ஒரு காலத்தில் செழித்து இருந்திருக்க வேண்டும், முக்கியமாக இந்த பகுதியில்".

த. ம. அ. யுடன் தொடர்ந்து பயணிக்கும் பொழுது புத்தர் சார்ந்த நிறைய தகவல்கள் திரு. பொன் வெங்கடேசன், திரு. கௌதம சன்னா, முனைவர் தேமொழி அவர்களின் வாயிலாக அறிந்து கொண்டே இருக்கிறேன்.

இலங்கைக்குச் செல்லப் போகிறேன் என்றவுடன் எனக்குத் தோன்றியது. இலங்கையில் இந்து மதம் பௌத்த மதம் சார்ந்த தடயங்கள் நிறைய பார்ப்போம் என்று. இலங்கையில் புத்த விகாரைகள் மற்றும் இந்து கோயில்கள் ஏராளம். எங்கள் பயணம் யாழ்ப்பாணம் மற்றும் திரிகோணமலை ஆகிய இரண்டு இடங்களிலிருந்தது. ஒன்றன்பின் ஒன்றாக இங்கு பட்டியல் இடுகிறேன்.

## கந்தரோடை புத்த சின்னங்கள்-19 மே 2023 - மாலை ஏழு மணி:



இங்கு செல்வதற்காக அவசரமாக யாழ்ப்பாணத்தில் இருந்து கிளம்பினோம். ஆனாலும் இருட்டி விட்டது. வழி தெரியாமல் இங்கு வந்தடைய நேரம் அதிகமாக விட்டது.. கூகிள் இல்லாமல் வாழ்க்கை இல்லை என்று என்னைப் போல் வாழ்வோருக்கு மொபைல் சிக்னல்

இல்லை என்பது எவ்வளவு பதட்டத்தைத் தருகிறது.இருட்டில் வந்த எங்களுக்கு முக்கியமாக எங்களுக்கான ஏற்பாடுகள் அனைத்தும் செய்து தந்து காரை ஓட்டி வந்த உதயசந்திரன் அண்ணனுக்கும் அதிர்ச்சி. நுழைவாயில் பூட்டி இருந்தது. இராணுவ வீரர்கள் பணியிலிருந்தனர். நாங்கள் இராணுவ வீரர்களிடம் திறந்து விடக் கோரிக்கை வைத்தோம். எங்களுக்கு சிங்களம் தெரியாது. ஆனாலும் ஆங்கிலம், தமிழ் மற்றும் உடல் மொழியில் கோரிக்கை வைத்தோம். திறந்தும் விட்டார்கள்.

உள்ளே புத்தப் பிக்குகளின் சமாதிகள் நிறைய இருந்தன. வெவ்வேறு அளவுகளில், சில பெரிதாக சில சிறியதாக. பனைமரங்கள் நிறைந்து இருந்தன. தென்றல் பனை ஓலைகளின் சத்தமும் மனதிற்கு இதமாக இருந்தது. இருபதிற்கு மேற்பட்ட புத்த ஸ்துபாக்கள்/சமாதிகள் இருந்தன. இந்த பகுதியில் தற்போது வீடுகள்/குடியிருப்புகள் நிறைய காணப்படுகின்றன. அங்கு உள்ள அறிவிப்புப் பலகையில் அகழாய்வு பற்றி, இந்த இடம் சார்ந்த வரலாறு பற்றி, தொல்லியல் தடயங்கள் எந்த அருங்காட்சியகத்தில் இருக்கிறது என்பதை நன்கு விளக்குகிறது. கூகுள் லென்ஸ் உதவியுடன் டெக்ஸ்ட் ஆக மாற்றி கீழே சேர்த்துள்ளேன்.

### கந்தரோடை தொல்லியல் அகழாய்வு-அறிவிப்புப்பலகை:

இலங்கையில் அனுராதபுரம், திஸ்ஸமஹராமம், மாதோட்டம் (மாந்தை, மன்னார்) மற்றும் கந்தரோடை (கந்துருகொட) ஆகிய இடங்கள் காலத்திலிருந்து நகரமயமாக்கத்திற்கு (Erburnisition)

உட்பட்ட முக்கிய வரலாற்று மையங்களாகவும் இருந்ததை அவ்விடங்களில் கண்டுபிடிக்கப்பட்ட தொல்லியல் ஆதாரங்கள் உறுதிப்படுத்துகின்றன. அவற்றுள் கடல் மட்டத்தில் இருந்து 28-30 அடிகள் உயரத்தில் அமைந்திருக்கும் கந்தரோடை ஏறத்தாழ இரண்டு கிலோ மீற்றர் 2 சதுர கிமீ பரப்பளவில் புராதன குடியிருப்புக்களைக் கொண்டிருந்தமைக்கான ஆதாரங்கள் அடையாளம் காணப்பட்டுள்ளன.






இதற்கு இப்பிரதேசத்தில் இலகுவாக குடியிருப்புக்கள் மற்றும் நிலையான பொருளாதாரக் கட்டமைப்பை ஏற்படுத்தக்கூடிய சிறு குளங்கள், கடலோடு வளமான மண், தொடராக அமைந்த கந்தரோடையைத் தொடர்புப்படுத்திய வழுக்கையாறு என்பன காரணங்களாக இருந்துள்ளன. இவற்றின் காரணமாக வரலாற்று தொடக்கக் காலத்தில் (Proto Historic Period) இருந்தே மக்கள் இங்கு வாழ்ந்துள்ளனர்.

மேலும் யாழ்ப்பாணக் குடநாட்டைச் சுற்றி அமைந்திருந்த வரலாற்றுப் பழமை வாய்ந்த ஜம்புகோளப்பட்டினம் (காங்கேசன் துறை), ஊர்காவற்றுறை, (சூகர தித்த அல்லது ஊராதொட்ட) மற்றும் மாந்தை (மாதோட்டம்) முதலான துறைமுகங்கள் கந்தரோடை இந்தியா, உரோம், அரேபியா, சீனா முதலான கீழைத்தேய மற்றும் மேலைத்தேய நாடுகளுடன் வர்த்தக. கலாசாரத் தொடர்புகளை வைத்திருக்க வாய்ப்பாக

அமைந்திருந்தது. இதை கந்தரோடையில் கண்டுபிடிக்கப்பட்ட விலை உயர்ந்த கல் மணிகள், மட்பாண்டங்கள், பல்வேறு நாடுகளுக்குரிய நாணயங்கள், புத்தர் சிலைகள், பிற தொல்பொருட்ச் சின்னங்கள் என்பன உறுதி செய்கின்றன. மேலும் இங்கு கண்டுபிடிக்கப்பட்ட கி.பி.10ஆம் நூற்றாண்டுக்குரிய கல்வெட்டு அநுராத இடத்தில் இருந்து ஆட்சி புரிந்த நான்காம் தப்புல மன்னனால் இந்த பௌத்த ஆலயத்திற்கு வழங்கப்பட்ட தானங்கள் பற்றிக் கூறும் கண்டி இராசதானி காலத்தில் எழுந்த நம்பொத்த என்ற சிங்கள இலக்கியம் வட இலங்கையைத் தமிழ்ப் பட்டினம் (டமிள பட்டின) எனக் குறிப்பிட்டு அங்கு பௌத்தர்கள் சென்று வழிபடுவதற்குரிய ஆலயங்கள் இருந்த இடங்களில் ஒன்றாக கந்தரோடையைக் (கந்துருகொட விஹாரய ) குறிப்பிடுகிறது.



வரலாற்று மரபுவழிக் கதைகளின்படி நாகதீபத்தில் சூலோதர, மஹோதர ஆகிய இரு நாகமன்னர்களிடையே ஏற்பட்ட சிம்மாசனப் போராட்டத்தை கௌதம புத்தர் தீர்த்துவைத்து அவரால் மன அமைதி பெற்றதாகவும், புவன்னதவில் (புங்குடுதீவு) வசித்த "ரஹத்" நிலையடைந்த அறுபது பௌத்தப் பிக்குகள் நஞ்சு கலந்த உணவை உட்கொண்டு இறந்ததாகவும், அவர்களுக்கான தகனக் கிரியையின் பின்னர் அவர்களின் சாம்பல் இந்த இடத்தில் புதைக்கப்பட்டதாகவும் மக்களிடையே ஒரு வரலாற்று மரபு காணப்படுகிறது.



யாழ்ப்பாண மாவட்டத்தில் நீதிபதியாகக் கடமையாற்றிய கலாநிதி போல் பீரிஸ் என்பவரே 1917 இல் கந்தரோடையில் முதன் முதலாக ஆய்வினை மேற்கொண்டு அதன் வரலாற்றுத் தொன்மையை எடுத்துக்காட்டும் தொல்லியல் ஆதாரங்களை வெளியுலகிற்குத் தெரியப்படுத்தியிருந்தார். - இதைத் தொடர்ந்து 1966இல் இலங்கைத் தொல்லியல் திவ்வர் ஆய்வினை மேற்கொண்டு சிறிய மற்றும் நடுத்தர பௌத்த தூபிகளைக் கண்டுபிடித்தது. இந்த எஸ்தூபிகிம் மஸ்தூபி கொண்டுள்ள நாகர பாணி

கட்டடக் கலை அம்சங்களைக் காணமுடியும். இத்தூபிகள் முருகைக் கல் மற்றும் சுண்ணாம்புக் கற்கள் மூலமாக மீள் உருவாக்கம் செய்யப்பட்டுள்ளது.

கந்தரோடையில் கண்டெடுக்கப்பட்ட புராதன குடியிருப்புக்களுக்குரிய சின்னங்கள் சிலைகள், சிற்பங்கள், கட்டிட எச்சங்கள் பிற தொல்லியற் சான்றாதாரங்கள் என்பன யாழ்ப்பாண தொல்லியல் அருங்காட்சியகத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. இதனால் தான் இலங்கையில் மிகப்பரந்த அளவில் புராதன காலத்தின் மக்கள் வாழ்விடமாகப் பாதுகாக்கப்படவேண்டிய இடம் இது எனவும் தொல்லியல் மையமாகவும் பிரகடனப்படுத்தப்பட்டுள்ளது.

மாதகல்/தம்பகொலபடுனா:



எங்களது பயணத்தில் இரண்டாவது நாள் காலை பார்த்தது மாதகல்/தம்பகொலபடுனா. மே 20, 2023 அன்று காலை 8:30 மணி போல் கிளம்பினோம். நேரத்தை சேமிப்பிதற்காக காரிலே உணவு எடுத்துக் கொண்டோம். உதயசந்திரன் அண்ணன் எல்லா ஏற்பாடுகளையும் செய்து வைத்திருந்தார்.

இந்தியாவில் நான் புத்தர் சிலைகளை நிறைய கண்டு இருக்கிறேன் ஆனால் புத்த கோவில் என்று பார்த்த ஞாபகம் இல்லை. கூர்க் அருகில் உள்ள புத்த மடத்தில் தான் ஒரு புத்தக் கோவிலைப் பார்த்த நினைவு. அந்த கோவிலும் இந்து கோயில் அமைப்பு கொண்டிருந்தது. டிசம்பர் மாதம் சென்ற களப்பணியில் நிறைய புத்த சிலைகளே பார்த்தோம். சில ஊர்க்காரரர்கள் நாட்டார் வழக்காற்றில் வழிபாடு செய்து வருகிறார்கள்.

இலங்கையில் பார்த்த அனைத்து கோயில்களும் சாஞ்சி ஸ்தூபி போலவே இருந்தது. ஒரு பெரிய குவிமாடம் (Dome) முழுவதும் செங்கல்லால் ஆனது. உள்ளே வெற்றிடம் கிடையாது. சில புனித விகாரைகளில் புத்தரின் உடல் உறுப்புகளின் சில பாகங்கள் வைக்கப்பட்டிருக்கும் என்று ஆய்வாளர்கள் தெரிவிக்கின்றனர். பளிச்சென்ற வெண்மை நிறத்தில் வண்ணம் தீட்டப்பட்டு இருக்கும் குவிமாடத்தின் அமைப்பு புத்தரின் தலைப்பகுதி போல் இருப்பதை உணரலாம் . குவிமாடத்தைச் சுற்றி நான்கு பக்கங்களிலும் புத்தர் உருவச் சிலைகள். சிலைகளுக்கு இடதுபக்கம் விளக்கும், பூவும், வலது பக்கத்தில் ஊதுபத்தி வைக்கும் இடமும்

இருக்கிறது. இதுவே புத்த விகாரையின் பொது அமைப்பு.









மாதகல் என்னும் தம்பகொலபடுனாவிற்கு வருவோம். இது யாழ்ப்பாண பகுதியில் இருக்கும் பாக்கு நீரிணை/குடா (Palk Strait) கடற்கரையில் அமைந்திருக்கும் ஒரு ரம்மியமான புத்தர் விகாரை. பேரரசர் அசோகரின் மகள் சங்கமித்திரை ஒரு புத்த துறவி. இலங்கையில் பௌத்த மதத்தைப் பரப்ப இந்த கடற்கரையில் அவர் வந்து இறங்கியுள்ளார். இந்த வரலாற்றை நினைவு கூறும் வகையில் அங்கு உள்ள காயலில் (backwaters) புத்த பிக்குனி சங்கமித்திரையின் உருவச் சிலையும் ஒரு கப்பலும் அமைக்கப்பட்டுள்ளது. அடுத்தாக கோயில் உள்ளே சென்றோம். அங்கு நிறைய தென்னை மரங்கள் மற்றும் பெரிய அளவில் அரச மரங்கள். நாங்கள் மூவர் மட்டுமே அங்கு இருந்தோம். எங்களுக்கே எங்களுக்கு என்ற உணர்வு. மரங்களின் காற்றோடு அந்த அமைதியையும் விகாரையும் பார்த்தோம்..

புத்த விகாரைக்கு இடது பக்கத்தில் ஒரு மண்டபம் உள்ளது. இதில் புத்தப்பிக்குனி சங்கமித்திரையின் வருகை பற்றிய விவரங்கள் ஓவியமாக வரையப்பட்டிருந்தது. நிறைய காணிக்கைகளும் அங்கு இருந்தது குறிக்கப்பட்டிருக்கிறது.

திருவள்ளுவர் ஆண்டு நமக்கு மிகவும் பழக்கமானது. புத்தர் கிமு ஐந்தாம் நூற்றாண்டில் பிறந்தவர் என்பதற்கேற்ப பௌத்த ஆண்டு இலங்கையில் கடைப்பிடிக்கப்படுகிறது. சங்கமித்ரா கோயில் 2002 ஜனவரி 21 ஆம் நாள் திறக்கப்பட்டது என அங்கு உள்ள கல்வெட்டு தெரிவிக்கிறது.. இது பௌத்த ஆண்டு 2545 ஆகும். மேலும் புத்த துறவி சங்கமித்ரா வரும்போது அப்போதைய இலங்கை மன்னன் (பெயர் தெரியவில்லை) வரவேற்பது ஒரு சிற்பமாக இங்கு வைக்கப்பட்டுள்ளது.

மூன்று மொழிகளில் வரைபடங்கள் இருந்தது இந்த விகாரையில். இந்த விகாரையில் நேரத்தை நன்கு செலவிட்டு கடற்கரையில் விளையாடி, நுங்கு குடித்த பிறகு வீடு திரும்பினோம்.

**இலங்கை கடற்கரைகள்:**

இந்த பயணத்தில் என்னை மிகவும் ஈர்த்தது இலங்கையின் கடற்கரைகள். யாழ்ப்பாணத்திலும் சரி, திரிகோணமலையிலும் சரி கடற்கரைகள் அட்டகாசம். யாழ்ப்பாணம் மாதகல் கடற்கரை, திரிகோணமலை மகாவலி ஆறு கழிமுகம் அருகில் இருந்த கடற்கரை, திரிகோணமலை உவர் மலை அருகில் இருந்த கடற்கரை (Powder bay, inner Harbor) , திரிகோணமலை மாயா கடற்கரை என்று நிறைய கடற்கரைக்குச் சென்று இருந்தோம். மாதகல் கடற்கரை வெண் மணல் கடற்கரையாகப் பார்ப்பதற்குக் கொள்ளை அழகாக இருந்தது.

தண்ணீர் என்றால் யாருக்குத் தான் பிடிக்காது. சென்னையில் எனக்குப் பிடித்த இடங்களில்

திருவான்மியூர் கடற்கரை முதல் இடம்பெறும். சென்னை மட்டும் அல்ல இந்தியாவின் எந்த கடற்கரையானாலும் எப்போதும் மக்கள் கூட்டம் இருக்கும். பசிபிக் பெருங்கடல் கடற்கரை சென்று போதும் அப்படியே இருந்தது. இலங்கை கடற்கரையில் அவ்வளவாக மக்கள் கூட்டமே இல்லை. கடலும் இலங்கை மக்களைப் போன்று அமைதியாகவே இருக்கிறது. இந்த அமைதி அலைகளின் சத்தத்தை நன்கு உணர/ ரசிக்க ஏதுவாக இருந்தது. இந்த நிசப்தம் தவிர மேலும் இரண்டு விஷயங்கள் சூழல் சார்ந்து என்னை யோசிக்க வைத்தது. கடல் நீர் அவ்வளவு சுத்தமாக கிணற்றுத் தண்ணீர் போல் இருக்கிறது. கடற்கரைகளில் நெகிழிக் குப்பைகளே கிடையாது. ஒரு கடற்கரையில் நாய்கள் சூட்டைத் தணித்துக் கொள்ள கடல் நீரில் படுத்த இருந்தது. கடல் அவர்களுக்கும் சொந்தம் தானே!!!





இயற்கை வளத்தைக் கெடுக்காமல் மீன் பிடித்தல் மற்றும் கடைகள் அமைக்க அந்த மக்களால் எப்படி முடிகிறது. நகரத்தின் வளர்ச்சி, சுற்றுலா, வழிபாடு, தொழிற்சாலை கழிவுகள், கடைகள் என்று நாம் ஏன் தமிழ்நாடு முழுவதும் உள்ள கடற்கரைகளை அசுத்தம் செய்து வருகிறோம். கடற்கரை மட்டுமல்ல எல்லா நீர் நிலைகளையும் அசுத்தம் செய்து கொண்டே இருக்கிறோம். உலகம் வெப்ப மயமாதல் பற்றி எச்சரிக்கைகள் அவ்வப்போது வந்தாலும் நாம் சூழல் சார்ந்து நம்முடைய வாழ்வின் தரம் குறித்து எந்த கவலையும் இல்லாமல் அசுத்தம் செய்து கொண்டே வருகிறோம்.

தொழிற்சாலை கழிவுகள் அரசு சட்டத்தின் கீழ் நிர்வகிக்கப்படும் என்றே வைத்துக் கொள்வோம். வழிபாடு செல்லும்போது மற்றும் சுற்றுலா செல்லும்போது ஒரு தனி நபரால் இயன்ற வகையில் கடற்கரைகளைச் சுத்தமாக வைத்துள்ளோமா என்று நம்மை நாமே கேட்டுக் கொள்ள வேண்டும். சென்னை மெரினா பீச்சில் தினமும் காலையில் ஒரு இயந்திரம் வைத்து பீச் மணலை சலித்து குப்பைகளைச் சுத்தம் செய்கிறார்கள். இதே போல

மற்ற கடற்கரையில் நடக்கிறதா என்பது தெரியாது. கடல் நீரில் டயப்பரை வீசுவது, பூக்கள், மாலைகள், பழைய துணிகளை வீசுவது, தின்பண்டங்கள் அடைத்த பையைக் கடற்கரை மணல் மற்றும் கடல் நீரில் விடுவது என்று தனிநபர்களாக மற்றும் குடும்பமாகச் சுற்றுச் சூழலுக்கு கேடு செய்து கொண்டே இருக்கிறோம். தனிநபர்களாகக் கட்டாயம் மாற்றத்தை ஏற்படுத்த வேண்டும். அமைப்பாகத் திரண்டு அடுத்த தலைமுறையினருக்கு இயற்கை வளங்களைச் சிதைக்காமல் அவர்கள் இடத்தில் தர முயல்வோம்.

இலங்கை கடற்கரைகளைப் பற்றி எழுத ஆரம்பித்தேன். என்னுள் இருந்த சுற்றுச்சூழல் அக்கறை மேலோங்கி விட்டது. ஆலோசனை மழையாக இந்த குறிப்பு மாறிவிட்டது. இலங்கை கடற்கரைக்கு மீண்டும் செல்வோம்.

மாதகல் / தம்பகொலபடுனா கடற்கரை பாக்கு குடா (Palk strait) - ல் இருக்கிறது. இதற்கும் கோடியக்கரைக்கும் வெறும் 32 கிலோமீட்டர் தூரம் தான் என்றால் நம்ப முடிகிறதா. இக்கடல் வழியில் ஏராளமான வர்த்தகங்கள் நடைபெற்றதிற்குச் சான்றாக வேதாரண்யத்தில் யாழ்ப்பாண வீதி என்று தனி வீதி இன்று வரை இருக்கிறது. இந்த பயணத்தில் ஒரு பள்ளி தலைமை ஆசிரியர் அவருடைய விடலை பருவத்தில் எம் ஜி ஆர், சிவாஜி கணேசன் படங்களைப் பார்க்க தமிழ் நாட்டிற்கு ஒரு மணி நேரம் கடல் பயணம் செய்ததை நினைவு கூர்ந்து புன்னகைத்தார். நமது செயற்குழு உறுப்பினர்களில் ஒருவரான மணி அண்ணன் தாத்தா, சின்ன தாத்தா

எல்லோரும் கடல் வணிகத்தில் ஈடுபட்டு நிறைய அறத்தொண்டுகளையும் கோடியக்கரை மக்களுக்காகச் செய்து இருக்கிறார்கள். இந்த அளவுக்குச் சுறுசுறுப்பாக யாழ்ப்பாண கடற்கரைகள் இருந்திருக்கிறது. ஆனால் போருக்கு பிந்தைய காலத்தில் நிலைமை மாறியுள்ளது.

திரிகோணமலை துறைமுக நகரமான வெகு ஆண்டுகளாக இயங்கி வருகிறது. இது ஒரு இயற்கையான துறைமுகம். மூன்று முக்கிய குடாக்கள் (bay) இந்த பகுதியை அலங்கரிக்கிறது. பவுடர் பே உள்ளூர் துறைமுகம், சீனா பே மற்றும் கோடியார் பே (Powder bay, inner Harbor, China bay, and Koddiyar/Trinconmalee bay). எங்களுடைய தங்குமிடம் உவர் மலையில் இருந்தது. அங்கே தான் பவுடர் பே மற்றும் உள்ளூர் துறைமுகம் இருக்கிறது.




சேருவிலா செல்லும் வழியில் சீனா பே மற்றும் கோடியார் பே கண்டோம். சீனா பே-வில் இலங்கை கடற்படைப் பிரிவு இருக்கிறது. கோடியார் பே-வில்

நிறைய கப்பல்கள், சரக்குக் கப்பல்கள் என்று துறைமுகம் சுறுசுறுப்பாக இயங்கி வருகிறது.





எங்களது பயணத் திட்டம் வேறு ஒன்றாக இருந்ததினால் இந்த இடங்களில் இறங்கி புகைப்படம் எடுத்துக் கொள்ள முடியவில்லை. காலையில் உவர் மலை கடற்கரையில் நடந்தோம். எவ்வளவு புத்துணர்ச்சியாக இருந்த நடை. சுபா மேடம் அப்போது கடல் வணிகத்தில் திரிகோணமலை முக்கியத்துவம், கடற்கொள்ளைகள் பற்றி கூறிக் கொண்டு வந்தார். நிறைய வாசிப்பு தேவைப் படுகிறது அதனை முழுவதுமாக உள்வாங்கிக் கொள்ள. இயற்கை வளங்களோடு அழகோடு வணிக கட்டமைப்பையும் திரிகோணமலையில் பார்த்தது மனதிற்கு இனிமையாக இருந்தது.

**யாழ்ப்பாணம் நல்லூர் கந்தசுவாமி கோயில்:**

யாழ்ப்பாணம் சென்றால் கட்டாயம் பார்க்க வேண்டிய முக்கியமான இடங்களில் ஒன்று நல்லூர் கந்தசுவாமி கோயில். இந்த ஊரில் நிறைய முருகன் கோவில்கள் உள்ளன. ஒவ்வொரு கோவிலும் பூத்துக் குலுங்கும் கொன்றை மரங்கள் கட்டாயம் இருக்கும். இதற்கு ஆங்கிலத்தில் கோல்டன் ஷவர் (Golden Shower) என்று பெயர். பெயருக்கு ஏற்றார் போல் காற்றில் ஆடும் போது ஷவர் போலவே உள்ளது.









இந்த கோயில் வளாகம் மிகவும் பெரியது. கோயிலுக்கு உள்ளே செல்லும்போது ஆண்கள் கேரள

கோயில்கள் போல் சட்டையை நீக்கிய செல்கிறார்கள். கோயிலினுள் புகைப்படம் எடுக்க அனுமதி கிடையாது. உள் பிரகாரத்தில் நிறைய தூண்கள் நல்ல வேலைப்பாட்டுடன் அமைக்கப்பட்டுள்ளது. இந்த தூண்களைப் பார்க்கும் போது ஹைதராபாத்தில் உள்ள இராமோஜி பிலிம் சிட்டி மகாபாரதம் செட் எனக்கு நினைவில் வந்தது. ஏனெனில் இரண்டுமே ஒரே மாதிரியான வேலைப்பாடு.



இந்தக் கோயிலின் உள் கோபுரம் முழுவதும் தங்கத்தினால் ஆனது. அதுவும் 2500 கிலோ தங்கம் என அறிந்து கொண்டோம். இந்த தங்கம் மற்றும் கோயிலின் கட்டிடச் செலவு நிறைய நன்கொடையில் நிறைவேற்றியதாக உதயசந்திரன் அண்ணன் சொன்னார். இது அந்த தெய்வத்தின் மீது அந்த பகுதி மக்கள் வைத்திருக்கும் நம்பிக்கையைப் பறைசாற்றுகிறது. எல்லாரும் சாமியைப் பார்க்க

ஓரே இடத்தில் தான் நின்று தான் தரிசனம் செய்ய வேண்டும். சாதாரண நாளில் கூட அவ்வளவு கூட்டம். நல்ல தரிசனம் எங்களுக்குக் கிடைத்தது. யாழ்ப்பாணத்தில் இருந்த நிறைய முருகன் கோயில் கோபுரங்கள் மஞ்சள் நிறத்தில் வண்ணம் தீட்டப்பட்டுள்ளது. இது சந்தனம் சாட்டுவது போல் தெரிகிறது. கோயில் சுவர்கள் எல்லாம் சிவப்பு நிறத்தில் இருக்கும்.

யாழ்ப்பாணம் இந்து மக்களிடம் சைவம் வைணவம் என்ற பாகுபாடு இல்லை. எல்லாமே தமிழ் கடவுள்கள் தான். இன்னும் நிறைய தமிழ் கோயில்கள் பார்த்தோம். விரைவில் அதனைப் பற்றி எழுதுகிறேன்.

. . . தொடரும்

# யானைகள் நமது காடுகளின் காவலர்கள்

— பேரா. முனைவர். நா.கண்ணன்

ஜூன் 23, சனி 2023 அன்று 335வது திசைகூடல் நிகழ்ச்சியாக நடைபெற்ற திரு. ஆற்றல் பிரவீண் குமார் அவர்களின் "கிழக்குத் தொடர்ச்சி மலையும் யானைகளின் வழித்தடங்களும்" எனும் உரை தெளிவானது, நிறைவானது, நெகிழ்வானது, அறிவியல் பூர்வமானது. யானைகள் பற்றிய பெரும்பாலான ஆவணங்கள் ஆப்பிரிக்காவை மையப்படுத்தி அமையும் போது, இந்திய யானைகள் பற்றி, குறிப்பாக நமது கிழக்குத்தொடர்ச்சி மலையில் வாழும் யானைகள் பற்றிய உரை மனமகிழ்ச்சி அளிப்பதாக இருந்தது.



தென்னகமலைகள் என்றால் பெரும்பாலும் மேற்குத்தொடர்ச்சி பற்றியே நாமறிவோம். ஆனால், கிழக்குத் தொடர்ச்சி மலை என்பது மேற்குத் தொடர்ச்சி மலை உருவாகும் முன்பே உருவாகிவிட்டது என்றும் இமய மலைத்தொடர்களுக்கும் முந்தியது என்று அவர் சொன்னது புதிய செய்தி. இந்தப் புவியியல் உண்மையே நமக்கு எது மேற்கைச் சேர்ந்தது, எது கிழக்கைச் சேர்ந்தது எனும் தெளிவைத் தருகிறது. அவ்வகையில் திருமாலிருஞ்சோலை மலையும், பழனி மலையும் கிழக்கு தொடர்ச்சியைச் சேர்ந்தது என்பது செய்தி. சேர்வராயன் மலை, ஏலகிரி மற்றும் பல மலைகள் கிழக்கைச் சேர்ந்தவை. இங்கு ஒரு காலத்தில் கோலோட்சிக் கொண்டிருந்த பேருயிர்தான் யானைகள். காட்டுராஜா எனும் பட்டத்தை நாம் சிங்கத்திற்கே பொதுவாய் கொடுத்தாலும் காட்டின் ராஜா யானைதான் என்கிறார் பிரவீண்.

காட்டை நிர்வகித்து, அதைச் சீரமைத்து, பல்லுயிர் பெருக்கத்திற்கு வழி வகுக்கும் திறமை யானைகளுக்கே உண்டு என்கிறது உரை. யானைகளை நம்பி பல்வேறு உயிரினங்களின் வாழ்வு இருப்பதை அழகிய படங்களோடு விளக்குகிறார் பிரவீண். ஒரு காடு ஆரோக்கியமாக இருக்கிறது எனில் அங்கு யானைகள் நிரம்ப இருக்க வேண்டும், புலிகள் இருக்க வேண்டும், பழவிதைகளைப் பரப்பும் பறவைகள் இருக்க வேண்டும். புலிகளின் பயன் என்னவெனில் மனிதனை காட்டிற்குள் அண்டவிடாமல் காப்பது என்றது குறிப்பிடப்பட வேண்டியது.

இத்தகைய யானைகள் வாழும் நிலப்பகுதிகள் மனித ஆக்கிரமிப்பிற்கு உள்ளாவதால் அவைகளின் எண்ணிக்கை வெகுவாகக் குறைந்துவிட்டன. ஒரு நாளைக்கு 200 கிலோ உணவும், 20 லிட்டர் நீரும் அருந்தும் யானைகளைத் தக்க வைக்க பெருத்த காடுகள் அவசியம். அவை சுதந்திரமாய் இறை தேட பெரும் நிலப்பரப்பு தேவை. இந்தியா சுதந்திரமடைந்த போது இருந்த அளவை விட காடுகளின் பரப்பு இப்போது மிகவும் குறைந்து விட்டது.

அழகர் மலையிலிருந்து தமிழகம், ஆந்திரம் தாண்டி ஒரிசா வரை வலசை போன பாதைகள் அழிந்துவிட்டன அல்லது ஆக்கிரமிக்கப்பட்டுவிட்டன. இந்நிலையில், யானைகளின் கூட்டம் மிக அருகி விட்டது. 25 பெண் யானைகளுக்கு ஒரு ஆண் யானை எனும் விகிதாச்சாரத்தில் உள்ள தற்போதைய நிலையில் இக்கூட்டம் பெருக வாய்ப்பும் இல்லை.

இந்த அவல நிலையை திரு.பிரவீண் பல பள்ளிகளுக்குச் சென்று எடுத்துரைத்து வருகிறார். மக்களிடம் விழிப்புணர்வை ஏற்படுத்துகிறார். தமிழ் மரபு அறக்கட்டளை ஏற்பாடு செய்திருந்த இக்கூட்டம் நிச்சயம் ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்தியதை கலந்துரையாடல் காட்டியது. பங்கு கொண்ட அனைவரும் ஈடுபாட்டுடன் கேள்வி கேட்டனர்.

மனிதப் பிறவி என்பது வரமா? அல்லது சாபமா? எனும் கேள்வி பிரம்மாண்டமாய் நம் முன் வந்து நின்றது யானைகள் எனும் பேருயிர் பற்றிய பிரவீண்

குமாரின் உரை கேட்ட பின்! யானைகள் நமது காடுகளின் காவலர்கள், அதன் தளபதி எனும் தகுதி உடையது. ஒரு யானை வாழ்வதின் மூலம் காடுகள் செழிக்கின்றன, பல்லுயிர் பெருக்கம் சமமாக நிற்கிறது, செழிக்கிறது என்பது இவ்வுரையின் சாராம்சம். நிலத்தில் ஓர் விவசாயி செய்யும் காரியத்தை யானைகள் காட்டில் செய்கின்றன. ஏர் பின்னது உலகம் என்பதைக் கொஞ்சம் மாற்றி யானை பின்னது உலகம் எனச் சொல்லும் அளவிற்கு யானைகளின் பயனுள்ளது. ஆறறிவு பற்றிப் பேசும் தொல்காப்பியர் யானை, கிளி, குரங்கு இவற்றுக்கும் அவையுண்டு எனச் சொல்வதாக டாக்டர் சாந்தினிபீ பின்னூட்டத்தில் சொன்னது நினைவு கொள்ளத்தக்கது. இத்தகைய மா உயிர்கள் இன்று நசிந்து அழிவுறும் நிலையில் உள்ளன. காரணம் மனிதனின் அபரித வளர்ச்சி, இயற்கை நுகர்வு, சுயநலம், அறியாமை.

மனிதனின் வாழ்வு பிற உயிர்களை நம்பியுள்ளது என்பதை அவன் கிஞ்சித்தும் உணர்வதில்லை. உதாரணமாக மனிதன் உயிர்வாழத் தேவையான உயிர் வளியை மனிதன் தயாரித்து வழங்குவதில்லை. கோடி, கோடி ஆண்டுகளாகப் பச்சைப்பாசியும், நீல பச்சைப் பாசிகளும் காற்றிலிருந்த கரியமில வாயுவைச் செரித்து உயிர்வளியாக மாற்றாவிடில் இன்று மனிதன் இல்லை. ஐந்திணைகளாக இயற்கை அமைந்திராவிடில் தமிழனுக்குச் சங்க கால வாழ்வில்லை. இவ்வளவு மாசுகளை மனிதன் அள்ளிக்கொட்டிய பின்னும் காற்றைச் சுத்தப்படுத்துகின்றன மரங்கள். கடல்வாழ் பாசிகள்

இன்றும் தொடர்ந்து உயிர்வளியை உருவாக்கிய வண்ணம் உள்ளன. மனிதன் வாழ பசுக்கூட்டங்களும், ஆடு, கோழி, பன்றி போன்ற விலங்களும் இன்றும் பயன்படுகின்றன. கடலில் உள்ள மீன்களை அவை தளிர்ப்பிக்கும் காலக்கெடுவை வழங்காமல் மீன் பிடித்தாலும் கடல் இன்னும் உணவை அவனுக்கு வழங்கிய வண்ணமே உள்ளது. ஆனால் இத்தொடர்பை உணராது, மனிதன் தன் கிராமங்களும், நகரங்களும், நகரங்களில் உள்ள மால்களும், கேளிக்கை, விளையாட்டுப் பூங்காக்களும் தன்னிச்சையாக அப்படியே எப்போதும் இருக்கும் என நம்புகிறான். இது அறியாமை, மடமை.



ஆனால் சங்ககாலத் தமிழன் அவ்வாறில்லை. அவனுக்கு, தனக்கும் தன்னைச் சூழ்ந்துள்ள சூழலுக்குமுள்ள தொடர்பு தெளிவாய் தெரிந்திருக்கிறது. இல்லையெனில், வள்ளுவன்,

பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாந் தலை

என்று சொல்ல மாட்டான். இங்கு பகுத்து உண்ணுதல் என்பது சாப்பாட்டை அல்ல. நமது சுற்றுச்சூழல் (Ecosystem) எனும் திணையை எவ்வாறு பாதுகாப்பாக எல்லோரும் சுகிக்கும் வண்ணம் பயன்படுத்துவது என்று பொருள். இதைச் சூழலில் வார்த்தையில் சொல்வதானால் சார்புப் பின்னல் (Nexus) உறவு எனலாம், தளர்வற்ற தொடர் வளர்ச்சி (Sustainability) எனலாம். அதாவது நமக்கும் பிற உயிர்களுக்குமுள்ள ஆழமான தொடர்பையும், சார்பையும் அறிந்து செயல்படல். தற்போது நமது தொடர்பு அறுந்துவிட்டது, சார்ப்பு பற்றிய புரிதல் இல்லை.

இதே நுகர் வேகத்துடன் மனிதன் செயல்பட்டால் அடுத்த நூறு ஆண்டுகளில் மனித உயிரினம் அழிந்துவிடும். கடந்த 50 வருடங்களில் மட்டும் 60% உயிரினங்களை மனிதச் செயற்பாட்டால் அழித்துள்ளன. பிரபஞ்சத்தில் உயிரியக்கம் என்பது பூமியில் மட்டுமே காணக்கிடைக்கிறது. அதன் தளர்வற்ற தொடர் பரிணாமம் என்பது ஒன்றையொன்று சார்ந்தும், ஒன்றுடன் ஒன்று தொடர்போடும் வளர்ந்திருக்கிறது. இச்சார்புப் பின்னல் அறுந்தால் மனித வாழ்வு குற்றுயிரும் கொலை உயிருமாய் இப்புவியில் அழிந்துவிடும்.

அதற்கு யானைகளே சாட்சி. பிரவீண் குமார் தக்க சான்றுகளோடு, மனிதாபிமானத்தோடு, நெஞ்சு நிறைய அன்போடு அறிவியல் பூர்வமாக இவ்வுரையை நிகழ்த்தியுள்ளார். யானை எவ்வளவு பெரியதோ அதைவிட அது பிற உயிர்கள் மீது

காட்டும்.பரிவு பெரிது என்றார். மனிதன் பரப்பியிருக்கும் ஞெகிழிக் குப்பைகளை அறியாமல் உண்டு விட்டு மாயும் யானைகளின் கதை சொன்னார் பிரவீண். அவற்றின் வழித்தடத்தில் வீடு கட்டிவிட்டு அவை வந்தால் விஷம் வைத்துக் கொள்ளும் பரிதாபத்தைச் சொன்னார் பிரவீண். மனிதன் பொறுப்பற்று தூக்கி எறியும் பாட்டில்களை மிதித்து விட்டு நொறுங்கிய துகளின் மூலமாய் வரும் காற்புண்ணை ஆற்ற மாட்டாமல் 5 நாளில் உயிர்விடும் பரிதாபத்தைச் சொன்னார் பிரவீண். மின்சார வேலிகள், தேசிய நெடுஞ்சாலைகள் என எத்தனை தடைகள்? யானைகளை வாழ வைக்கத்தக்க திருவேங்கட மலைக்குள் யானைகள் நடமாட்டமில்லை காரணம் அவற்றின் பாரம்பரிய வலசைப் பாதைகள் ஆக்கிரமிக்கப்பட்டுவிட்டன என்கிறார் பிரவீண். குதிரை, நாய், கழுதை, மாடு போன்ற விலங்குகளை மனிதனால் கருவுறச் செய்து வாழ வைத்துவிட முடியும். ஆயின், மதம் கொண்ட யானையை அடக்கி ஒரு பெண் யானையைக் கருவுறச் செய்ய மனிதனால் முடியாது. எனவே அவைகளின் பாரம்பரியக் காடுகளைப் பாதுகாப்பதே அவைகளுக்கு நாம் செய்யும் நன்றியாகும்.

நாம் ஒவ்வொருவரும் கட்டாயம் காண வேண்டிய காணொளி இது. உங்கள் வாழ்வில் இரண்டு மணி நேரத்தை இதற்கென ஒதுக்கினால் உங்கள் வாழ்வே மாறும். பிற வாழ்வும் செழிப்புறும்.

இவ்வுரையின் தொடுப்பு: https://youtu.be/6QzkjfkGyPc

# கர்னூலில் காணப்படும் பாறை ஓவியங்கள்

— *முனைவர் மு. பாமா*

ஜூன் 9, 2023 அன்று மாலை ரோஜா முத்தையா ஆராய்ச்சி நூலகம் நடத்திய ஆந்திர மாநிலம் கர்னூலில் உள்ள குகை ஓவியங்கள் என்ற தலைப்பிலான ஆங்கில உரையை நேரில் கேட்கும் வாய்ப்பு கிடைக்கப் பெற்றேன்.




இந்த உரையில் கர்னூலில் கண்டுபிடிக்கப்பட்ட ஓவியங்களை வைத்து நம் மூதாதையர் பற்றிய ஒரு ஆராய்ச்சி முடிவினை சென்னைப் பால்களைக் கழக பேராசிரியர் முனைவர் ஜின்னு கோஷி பேசினார். நான் எடுத்த குறிப்புகளை (ஆங்கிலத்தில்) இங்கு பகிர்கிறேன்.

நிகழ்ச்சியின் காணொளி இங்கே:
https://www.youtube.com/live/3cizpIAU9e4

*****



Lecture notes on Rock-art at RMRL:

Speaker: Dr Jinu Koshy, Excavation in Charge, University of Madras

Topic: Rock arts found in Kurnool and its semantic memory - A cognitive insight

Venue: Roja Muthiah Research Library

Date and Time: 9 June 2023, 17:30 hours

This is the first time I am listening to a formal talk on rock arts. In the recent one year, I had been to many caves containing rock arts in parts of Theni, Madurai, Udumalaipet. Those rock arts have been continuously made me question what scientific methods are available to date these rock arts, what would be the time period these drawings were done, what material had been used to do rock arts... This lecture by Dr. Jinu had given me good insights for my questions and exposed me further to the excavations on rock arts.

Dr. Jinu started with a very good introduction on the rock arts/paintings. Largely the rock arts can be classified into: (i) pictographs and (ii) petroglyphs. Pictographs are paintings made in red, white, black and green colors and most commonly known. Red colored pictograph is made out of hematite & manganese, white ones are out of Kaolin, black paintings were drawn using charcoal, green colored ones are from vegetable oils. Petroglyphs on the other hand are impressions made on the rocks using hand tools. The depth of the impressions depends on the tools used. Most common activities depicted in these paintings are: (i) economic activities, (ii) social activities, (iii) food gathering, (iv) cultural activities, (v) geometric and non-geometric abstract symbols. Rock arts distribution/available in India is

shown in the below picture [consolidated by Mr. Giriraj Kumar, 2014 weblink] . Understanding rock arts gives the cognitive ability of humans in pre-historic period. So, this field of archeology is actively pursued to understand human evolution.

In India, largest representation of rock arts and rock shelters were available in Bhimbedtka caves which is commonly known to anyone interested in human evolution. Dr. Jinu & team's excavation in Kurnool, Andhra Pradesh had identified about 500-600 rock shelters which could be India's largest rock art/rock shelter hub. In Kurnool of Andhra Pradesh, rock paintings were found in two major places/hubs: Uppalapadu and Chennakkapalle. The most astonishing details of this excavation is that the paintings found here. These rock arts contain pictures of Ostrich, Giraffe, Kangaroo, Ungulates, Proptodon, Humans with raised arms, Tasmanian tigers, abstract symbols, Lion, Horse/Zebra, fish, wild boar, Lizard with intricate details of inner organs, Platypus, Deer & antelope in large numbers, big headed turtle, boat, man hunting rodent (moving) animal (caught by trapping with a net), salt water crocodile, butterflies. The list is enormous and as you can see these are not the animals not seen in India through several thousands of years. Big headed turtle is seen mostly in south China whereas Kangaroo, Zebra, salt water crocodiles are seen mostly in Australia. Moreover, these paintings are Mesolithic and not the neolithic or historical period.

Dr. Jinu's team had made the following hypotheses to continue their research:

(i) These animals could have lived locally here
OR

(ii) Human migrated from somewhere and recreated these paintings as memories.

Their research had proven the latter is true i.e., Humans have migrated to India from south east Asia to India which is a westward migration happened around 10,000 BC. These migrated people are part of Austro-Asiatic group and known as Munda.

His detailed talk is available in RMRL Chennai YouTube Channel given above.

# *தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு*

## *— ஏப்ரல் 1, 2023 — ஜூன் 30, 2023 நிகழ்வுகள்*

வேர்களைத் தேடி – கருத்தரங்கம்
ஏப்ரல் 29, 2023




29.4.2023 அன்று  மதுரையில் மதுரை நாடாளுமன்ற உறுப்பினர் மாண்புமிகு சு.வெங்கடேசன் அவர்கள் நிகழ்ச்சியைத் தொடக்கி வைக்க நடைபெற்ற வேர்களைத் தேடி – கருத்தரங்கம். இணைந்து வழங்கியவர் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு மற்றும் மடீட்சியா கிளப்

வேர்களைத் தேடி – கருத்தரங்கம் –
[https://youtu.be/uJJkCmxTPuA](https://youtu.be/uJJkCmxTPuA)

மரபணு ஆய்வுகள் நமது தொல்லியல் அகழாய்வோடு இணைந்து தமிழ் வரலாற்றுத் தேடலுக்குப் புதிய வெளிச்சத்தைப் பாய்ச்சக் கூடியவை. தமிழ்ச் சூழலில் மரபணு ஆய்வுகள் தொடர்பான கருத்தாக்கங்கள் அதிகமாக நிகழ்த்தப்பட வேண்டும் என்ற எண்ணத்தோடு தமிழ் மரபு அறக்கட்டளை ஏற்பாடு செய்திருந்த நிகழ்ச்சி இது.







# திருக்குறளின் 3 பிரிவுகளையும் முதல்முதலில் மொழிபெயர்த்தவர்கள் ஜெர்மானியர்

கருத்தரங்கில் தகவல்

மதுரை, ஏப்.30–

'திருக்குறளின் 3 பிரிவுகளையும் முதன் முதலில் மொழிபெயர்த்தவர்கள் ஜெர்மானியர்கள்' என மதுரை மடீட்சியாவில் நடந்த வேர்கள் வேர்களை தேடி கருத்தரங்கில் தெரிவிக்கப்பட்டது.

தமிழ் மரபு அறக்கட்டளை தலைவர் சுபாஷினி பேசியதாவது:

உலகின் பல ஆவணங்கள் பாதுகாக்கப்படுகின்றன. தஞ்சை நாயக்க மன்னன் தரங்கம்பாடியை குத்தகைக்கு கொடுத்த தங்க ஓலை டென்மார்க் ஆவண பாதுகாப்பகத்தில் உள்ளது. பிரான்ஸ் நூலகத்தில் உள்ள ஆவணங்களை மின்னாக்கம் செய்த போது வீரமாமுனிவர் எழுதி வெளிவராத நூல் கிடைத்தது. 2021ம் ஆண்டு அதனை நூலாக மாற்றி வெளியிட்டோம்.

1830ல் வீரமாமுனிவர் அறத்துப்பால், பொருட்பாலை மட்டும் மொழிப்பெயர்த்தார். ஆனால் திருக்குறளின் 3 பிரிவுகளையும் முதன்முதலில் மொழிபெயர்த்தவர்கள் ஜெர்மானியர்கள்.

1840ல் ஜெர்மனி கல்வி நிறுவனத்தில் தமிழ் ஒரு பாடமாக நடத்தப்பட்டது. 2019ல் ஜெர்மனியில் திருவள்ளுவர் சிலை அறக்கட்டளை சார்பில் நிறுவப்பட்டது. இதுவரை 14 வரலாற்று ஆய்வு நூல்கள் வெளியிட்டுள்ளோம், என்றார்.

மடீட்சியா தலைவர் சம்பத், பிச்சு அறக்கட்டளை நிறுவனர் பிச்சப்பன், தமிழ் மரபு அறக்கட்டளை துணைத் தலைவர் கண்ணன், மதுரை காமராஜ் பல்கலை பேராசிரியர் குமரேசன், வெங்கடேசன் எம்.பி., தமிழின் வேர்கள் குறித்து கலந்துரையாடினர்.

எம் 130 மரபணு உடைய முதல் இந்தியன் விருமாண்டி, மடீட்சியா கிளப் தலைவர் இளங்கோ, கல்லூரி மாணவர்கள் பங்கேற்றனர்.

■ மதுரை மடீட்சியாவில் நடந்த வேர்கள் வேர்களை தேடி கருத்தரங்கில் வழங்கப்பட்ட புத்தகங்களுடன் இடமிருந்து பேராசிரியர் பிச்சப்பன், மடீட்சியா தலைவர் சம்பத், தமிழ் மரபு அறக்கட்டளை தலைவர் சுபாஷினி, பேராசிரியர்கள் கண்ணன், குமரேசன்.

இன்றைய நிகழ்ச்சி

இப்பகுதியில் சங்க அமைப்பு, கோயில், பள்ளி, கல்லூரி, பொது, ஆன்மிக, வர்த்தக நிகழ்ச்சிகளை இலவசமாக வெளியிடுகிறோம்.
இன்றைய நிகழ்ச்சி, தினமலர், மதுரை – 625 016.
98940 09463 mdureporting@dinamalar.in

யாழ் நூலகத்திற்கு நூல்கள் அன்பளிப்பு
மே 19, 2023




இலங்கையின் திருகோணமலைக்குச் சென்றிருந்த போது அங்குள்ள சில பள்ளிகளுக்கும் கல்லூரிகளுக்கும் நேரில் சென்று தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகத்தின் நூல்களைப் பரிசளித்து வந்தோம். திருகோணமலை ஸ்ரீ சண்முக இந்து மகளிர் கல்லூரி மற்றும் வரலாற்றுச் சிறப்புமிக்க யாழ்ப்பாணம் நூலகத்தில் இன்று தமிழ் மரபு அறக்கட்டளை குழுவினர் தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகத்தின் எல்லா நூல்களையும் ஒரு பிரதி அன்பளிப்பாக வழங்கினோம்.

முனைவர் க. சுபாஷிணி
தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பக பிரிவு
தலைவர், தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு

## “மரபும் வரலாறும் ஒரு தேடல்” – யாழ்ப்பாண பல்கலைக்கழக வரலாற்றுத் துறையின் நிகழ்ச்சி

மே 22, 2023




மே 22, 2023 (திங்கட்கிழமை) மாலை 2.30 மணியளவில் யாழ்ப்பாண பல்கலைக்கழக கலைப்பீட கருத்தரங்க மண்டபத்தில் உலக தமிழர் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் அனுசரணையுடன் யாழ்ப்பாண பல்கலைக்கழக வரலாற்றுத் துறையின் ஒழுங்கமைப்பில், “மரபும் வரலாறும் ஒரு தேடல்” என்ற தொனிப்பொருளுடன் கலந்துரையாடல் இடம்பெற்றது.

இந்நிகழ்வினை வரலாற்றுத் துறையின் தலைவர் திருமதி சாந்தினி அருளானந்தம் அவர்கள் தலைமை தாங்கி சிறப்புற நடாத்தினார். முதலில் செல்வி மோகனதாரணியின் இறைவணக்கத்துடன், இந்நிகழ்வின் வரவேற்புரையினை வரலாற்றுத்

துறையின் விரிவுரையாளர் உசாந்தி மகாலிங்கம் அவர்கள் மேற்கொண்டார். அத்துடன் சிறப்புரைகளை ஓய்வு நிலை பேராசிரியர் பரமு புஷ்பரட்ணம் அவர்கள் சிறப்புரை வழங்கினார்.







தொடர்ந்து, தமிழ் மரபு அறக்கட்டளையும் அதன் பணிகளும் என்ற ரீதியிலே முனைவர் மு.இறைவாணி அவர்களும், கடிகை அமைப்பும் அதன் பணிகளும் என்ற ரீதியில் முனைவர் மு.பாமா அவர்களும், மரபும் வரலாறும் ஒரு தேடல் என்ற ரீதியில் இவ்வமைப்பின் தலைவர் முனைவர் க.சுபாஷிணி அவர்களும், யாழ்ப்பாணத்திற்கான இவ்வமைப்பின் கிளை உருவாக்கம் தொடர்பாக

வடமாகாண கலாசா உத்தியோகத்தர் அருள்சந்திரன் அவர்களும் சிறப்புரைகளை வழங்கினார்கள்.







இதன்போது தமிழர் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் செயற்பாடுகள் குறித்தும் செய்ய வேண்டியவை குறித்தும் விளக்கமளிக்கப்பட்டது. குறிப்பாக தமிழர் வரலாறு, பண்பாடு, அகழ்வுகள், மரபுப்பயணம், ஆய்வுகள் போன்றவற்றை ஐரோப்பிய நாடுகள் மட்டுமன்றி ஆசிய நாடுகளிலும் ஆவணப்படுத்தல் முயற்சிகளை மேற்கொண்டு வருவது பற்றி கூறப்பட்டது. குறிப்பாக

ஓலைச்சுவடிகளைச் சேகரித்தல், ஓலைச்சுவடிகளை மின்னாக்கப்படுத்தல், கல்வெட்டு வாசிப்புக்கள், ஆய்வுக்கட்டுரைகளை வெளியிடல், இணைய வழி கலந்துரையாடல்கள், தூரக்கிழக்காசிய நாடுகளில் ஆய்வு முயற்சிகள் போன்றவற்றையும் தொடர்ச்சியாக மேற்கொண்டு வருவதாகவும் குறிப்பிட்டனர்.



அத்துடன் தொடர்ந்து தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு இலங்கை – யாழ்ப்பாண கிளைக்கான செயற்பாடுகளை மேற்கொள்ள புதிய உறுப்பினர்கள் தெரிவு இடம்பெற்றது. அந்த வகையில் கழகத்தின் ஆலோசகராக திருமதி சாந்தினி அருளானந்தம் நியமிக்கப்பட்டார். பொறுப்பாளராக திருமதி அனிதா சசிகரன் தெரிவுசெய்யப்பட்டார். தலைவராக செல்வி மோகனதாரணி தெரிவு செய்யப்பட்டார். துணைத்தலைவர்களாக எஸ்.பிரியங்கா, எஸ்.மதுசா அவர்களும் தெரிவு செய்யப்பட்டனர். செயலாளராக செல்வன் தி. சாரலன் அவர்களும் துணைச்செயலாளராக ஆர்.றேகாசினி அவர்களும்

தெரிவு செய்யப்பட்டனர். பொருளாளராக லியானா அவர்கள் தெரிவு செய்யப்பட்டார். குழு உறுப்பினர்களாக மாணவர்கள் இணைந்து கொண்டனர்.

ஆகவே தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு இலங்கை – யாழ்ப்பாண கிளை மேற்கொள்ள வேண்டிய பணிகளாக தமிழர் மரபுகளை அடையாளப்படுத்தல், யாழ்ப்பாண வரலாற்றுச் சின்னங்கள் தொடர்பான ஆவணப்பதிவுகளை மேற்கொள்ளல், வலைப்பக்கங்களை உருவாக்குதல் போன்ற செயற்பாடுகள் குறிப்பிடத்தக்கன. அத்துடன் உலக தமிழ் மரபு அறக்கட்டளையினால் வெளியிடப்பட்ட நூல்களும் வரலாற்றுத் துறைக்கு அன்பளிப்புச்செய்யப்பட்டன.

இறுதியாக ஒழுங்கமைப்பாளரின் தொகுப்புரை இடம்பெற்று, தொடர்ந்து திருமதி அனிதா சசிகரன் அவர்களின் நன்றி உரையுடன் கலந்துரையாடல் இனிதே நிறைவேறியது.

“வரலாறு படிப்போம், வரலாறு படைப்போம் அதில் நாமும் ஒருவராக இருப்போம்”

நன்றி வணக்கம்.

செயலாளர் செல்வன் தி. சாரலன்
தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு
இலங்கை – யாழ்ப்பாண கிளை

## இலங்கை ஆளுநர் திரு. செந்தில் தொண்டமான் அவர்களுடன் சந்திப்பு

மே 24, 2023





அம்பாறை, திருகோணமலை, மட்டக்களப்பு ஆகிய மூன்று பகுதிகளை உள்ளடக்கிய இலங்கையின் கிழக்கு மாகாணத்தின் புதிய ஆளுநராக கடந்த சில நாட்களுக்கு முன் பதவி ஏற்றுக்கொண்ட இனிய தோழர் மாண்புமிகு திரு. செந்தில் தொண்டமான் அவர்களது இனிய அழைப்பின் பேரில் நேற்று கிழக்கு மாகாணப் பகுதிக்குத் தமிழ் மரபு அறக்கட்டளையினர் சென்றிருந்தோம்.

ஆளுநர் அவர்களைப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்து தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகத்தின் அனைத்து நூல்களையும் வழங்கினோம்.

இந்நூல்களை உடனே அவர் தனது அலுவலக புத்தக அலமாரியில் காட்சிக்கு வைத்தது மகிழ்ச்சியான தருணம். கடின உழைப்பாளி; மக்களின் தேவையறிந்து பணியாற்றி வரும் ஊவா மாகாணத்தின் முன்னாள் முதலமைச்சரும் பல்வேறு துறைகளில் அமைச்சராகவும் செயலாற்றிய மாண்புமிகு செந்தில் தொண்டமான் அவர்கள் பழகுவதற்கு மிகவும் இனிமையானவர்.



கிழக்கு மாகாணத்தில் தொழில்துறை, கல்வி, சமூகம், பண்பாடு, பொருளாதாரம் என அனைத்து கோணங்களிலும் துரித மேம்பாட்டைக் கொண்டு வர வேண்டும் எனத் தனது பணியைத் தொடங்கி இருக்கும் மாண்புமிகு ஆளுநர் திரு. செந்தில் தொண்டமான் அவர்களுக்குத் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் இனிய நல்வாழ்த்துக்கள்.

முனைவர் க. சுபாஷிணி,
தலைவர் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு
24.5.2023

தமிழ்நாடு தமிழ் வளர்ச்சித்துறை அமைச்சர் மாண்புமிகு திரு. சாமிநாதன் அவர்களுடன் சந்திப்பு
மே 29, 2023



மே 29 2023 அன்று காலை தமிழ்நாடு தமிழ் வளர்ச்சித்துறை அமைச்சர் மாண்புமிகு திரு. சாமிநாதன் அவர்களை அவரது அலுவலகத்தில் சந்தித்துக் கலந்துரையாடிய போது தமிழ் வளர்ச்சி குறித்த கருத்துகளை தமிழ் மரபு அறக்கட்டளை குழுவினர் மாண்புமிகு அமைச்சருடன் பகிர்ந்து கொண்டனர்.

அமைச்சர் அவர்களுக்குத் தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகத்தின் அண்மைய வெளியீடான நிலவியல் நோக்கில் கங்கைகொண்ட சோழபுரம் என்ற நூலைப் பரிசளித்து மகிழ்ந்தோம்.



முனைவர் க. சுபாஷிணி
தலைவர், தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு
29.5.2023

தமிழ் வளர்ச்சித்துறை செயலரிடம் தமிழ் வளர்ச்சிக்கான பரிந்துரைகளை வழங்கல்
ஜூன் 8, 2023



தமிழ் வளர்ச்சித்துறை செயலர் டாக்டர் செல்வராஜ் இஆப அவர்களது அலுவலகத்தில் ஜூன் 8, 2023 காலை தமிழ் மரபு அறக்கட்டளை தமிழ் வளர்ச்சிக்கான பரிந்துரைகளை வழங்கி அவை பற்றிய கலந்துரையாடலை நிகழ்த்தினோம்.

எங்களுடன் இந்தக் கலந்துரையாடலில் செம்மொழி தமிழாய்வு நிறுவனத்தின் இயக்குநர் டாக்டர் சந்திரசேகர் அவர்களும் ஆய்வாளர்களும் கலந்து கொண்டனர்.தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் சார்பில் என்னுடன் டாக்டர் கண்ணன் மற்றும் க்ரிஷ் ஆகியோரும் கலந்து கொண்டனர்.உலகளாவிய அளவில் தமிழ் ஆய்வுகள் நடவடிக்கைகள் தொடர்பாக பயனுள்ள பல விஷயங்களை இந்தச் சந்திப்பில் கலந்துரையாடினோம்.

## பேரூர் தமிழ்க்கல்லூரிக்கு தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகத்தின் நூல்கள் அன்பளிப்பு

ஜூன் 9, 2023




பேரூரில் இயங்கும் பேரூர் சைவ மடத்தின் பேரூர் தமிழ்க்கல்லூரிக்கு தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகத்தின் வெளியீடுகள் 16 நூல்களை அன்பளிப்பாக அனுப்பியுள்ளோம். இவை இன்று பேரூர் தமிழ்க்கல்லூரி நூலகத்தை அடைந்துவிட்டதாகச் செய்தி கிட்டியது. இந்தக் கல்லூரி நூலகத்துக்கு நூல்கள் தேவைப்படுவதைத் தெரிவித்த நம் குழு உறுப்பினர் ஆசிரியர் திருமிகு ஹேமா அவர்களுக்கும் நூல்களை அனுப்பி வைக்க ஏற்பாடுகளைக் கவனித்த வருண், பாமா ஆகியோருக்கும் எனது பாராட்டுகள்.

பேரூர் தமிழ்க்கல்லூரியில் பயிலும் மாணவ மாணவியருக்குத் தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகத்தின் வெளியீடுகள் பயனளிக்கும் என்ற பெரிதும் நம்புகின்றோம்.




முனைவர் க. சுபாஷிணி
தலைவர், தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு

## பல்கலைக்கழக மாணவர்களுக்கான பரிந்துரை பட்டியலில் முதலிடம் பெற்ற தமிழ் மரபு அறக்கட்டளை வலைப் பக்கங்கள்

**ஜூன் 16, 2023**

பல்கலைக்கழக மாணவர்களுக்கான பரிந்துரை பட்டியலில் முதலிடம் பெற்ற தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் வலைப் பக்கங்கள்

ஒரு பல்கலைக்கழகத்துக்கு இணையான அத்தனை தரவுகள் நமது தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் வலைப் பக்கத்தில் உள்ளன. ஆய்வுப் பேராசிரியர்களும் ஆய்வு மாணவர்களும் பொது மக்களும் இவற்றை தங்கள் அறிவுத் தேடலுக்காகப் பயன்படுத்திக் கொள்ளலாம். அனைத்துமே இலவசமாக வழங்கியிருக்கின்றோம். ஏறக்குறைய 20 ஆண்டுக்கால உழைப்பு.

தரமான நமது வலைப்பக்கம் கல்வியாளர்களையும் பேராசிரியர்களையும் மாணவர்களையும் சென்றடைய அவற்றைப் பல்கலைக்கழக பட்டியலில் முதலிடத்தில் வைத்து நமக்கு அங்கீகாரமும் பெருமையும் வழங்கிய தமிழக அரசின் கல்வித் துறைக்கு எனது நெஞ்சார்ந்த நன்றியினை நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர்.க.சுபாஷிணி
தலைவர், தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு

| | |
|---|---|
| • | புதிய உரைநடை –மா.இராமலிங்கம் |
| • | நாடகக் கலை –பம்மல் சம்பந்தம் முதலியார் |
| • | தமிழ் நாவல் இலக்கியம்- கலாநிதி கைலாசபதி |



| | |
|---|---|
| • | ப. மருதநாயகம், மேலை நோக்கில் தமிழ்க் கவிதை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை – 600 113, 2001. |
| • | கா. சிவத்தம்பி, ச. சிவகாமி, இராம. குருநாதன், உலகத் தமிழ் இலக்கிய வரலாறு : கி.பி. 1851-2000, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை – 600 113. 2005. |
| • | வல்லிக்கண்ணன், புதுக் கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும். |
| • | இரா. பாலசுப்பிரமணியன், நாவல் கலையியல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை – 600 113. 2005. |
| • | நா. வானமாமலை, தமிழ் நாவல்கள் ஒரு மதிப்பீடு, 1973. |
| • | எஸ். தோத்தாத்ரி, தமிழ் நாவல் அடிப்படைகள், 1980. |
| • | கா. சிவத்தம்பி, தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும், 1996. |
| • | சி.சு. செல்லப்பா, தமிழ்ச் சிறுகதை வரலாறு, 1974. |
| • | எம். தேவசகாயகுமார், தமிழ்ச் சிறுகதை வரலாறு, 1979. |
| • | பம்மல் சம்பந்த முதலியார், நாடகமேடை நினைவுகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை-600 113. 1998. |
| • | அ.அ. மணவாளன், இருபதாம் நூற்றாண்டின் இலக்கியக் கோட்பாடுகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை-600 113. |
| **Related Online Contents [MOOC, SWAYAM, NPTEL, Websites etc.]** | |
| **Web Sources** | |
| • | Tamil Heritage Foundation- www.tamilheritage.org <http://www.tamilheritage.org><br>Tamil virtual University Library- www.tamilvu.org/ library http://www.virtualvu.org/library<br>Project Madurai - www.projectmadurai.org.<br>Chennai Library- www.chennailibrary.com <http://www.chennailibrary.com>.<br>Tamil Universal Digital Library- www.ulib.prg <http://www.ulib.prg>.<br>Tamil E-Books Downloads- tamilebooksdownloads. blogspot.com<br>Tamil Books on line- books.tamil cube.com<br>Catalogue of the Tamil books in the Library of British Congress archive.org<br>Tamil novels on line - books.tamilcube.com |

| | PO 1 | PO 2 | PO 3 | PO 4 | PO 5 | PO 6 | PO 7 | PO 8 | PO 9 | PO 10 | PSO 1 | PSO 2 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| CLO1 | 3 | 2 | 3 | 3 | 3 | 2 | 2 | 2 | 3 | 2 | 3 | 2 |
| CLO2 | 3 | 3 | 2 | 2 | 2 | 3 | 2 | 3 | 3 | 2 | 2 | 2 |

| | | |
|---|---|---|
| Unit -IV | [illegible]<br>நாயக்கர் காலம்(கி.பி.9 முதல் 18ஆம் நூற்றாண்டு வரை)<br>சோழர்களின் எழுச்சி-இராசராச சோழன்–ராஜேந்திர சோழன் – அயல்நாட்டில் தமிழர் ஆட்சி- தஞ்சைப் பெரிய கோயில் - கட்டடக்கலைவளர்ச்சி –உரையாசிரியர்கள் -காப்பியங்கள் வளர்ச்சி – நாயக்கர்கள் வருகை- பாளையப்பட்டுகள்- கோயில் கோபுரங்கள்- சிற்றிலக்கிய வளர்ச்சி | |
| Unit -V | அலகு – 5 சமூக எழுச்சிக்காலம் (19-20 ஆம் நூற்றாண்டு)<br>அச்சுநூல்கள் பதிப்பு- தமிழ் இலக்கிய மறுமலர்ச்சி– உ.வே.சா,சி.வை.தா.பங்களிப்பு –தென்னிந்திய நல உரிமைச்சங்கத்தின் காலம் – திராவிட இயக்ககாலம்- தமிழர்களின் சமூக எழுச்சி | |

**Text Books**

1.தமிழக வரலாறும் பண்பாடும்–டாக்டர் கே கேபிள்ளை ,உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி.சென்னை–113.

2.தமிழர் நாகரிகமும் பண்பாடும்–டாக்டர் தட்சிணாமூர்த்தி,யாழ் வெளியீடு,மேற்கு அண்ணாநகர், சென்னை 40, 2011

**Reference Books**

- தமிழக சமுதாய பண்பாட்டு கலை வரலாறு -முனைவர்கு.சேதுராமன் என்சிபிஎச், 2011.
- தமிழர் கலையும் பண்பாடும்– அ.கா.பெருமாள்,பாவைவெளியீடு, சென்னை-98

21

21

- 

**Related Online Contents [MOOC, SWAYAM, NPTEL, Websites etc.]**

**Web Sources**

- ' Tamil Heritage Foundation- www.tamilheritage.org <http://www.tamilheritage.org>
- Tamil Virtual University Library- www.tamilvu.org/ library http://www.virtualvu.org/library
- Project Madurai - www.projectmadurai.org.
- Chennai Library- www.chennailibrary.com <http://www.chennailibrary.com>.
- Tamil Universal Digital Library- www.ulib.prg <http://www.ulib.prg>.
- Tamil E-Books Downloads- tamilebooksdownloads. blogspot.com
- Tamil Books on line- books.tamil cube.com
- Catalogue of the Tamil books in the Library of British Congress archive.org
- Tamil novels on line - books.tamilcube.com

| | PO 1 | PO 2 | PO 3 | PO 4 | PO 5 | PO 6 | PO 7 | PO 8 | PO 9 | PO 10 | PSO 1 | PSO 2 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| CLO1 | 3 | 2 | 2 | 2 | 3 | 3 | 2 | 2 | 2 | 3 | 3 | 2 |
| CLO2 | 3 | 2 | 3 | 3 | 3 | 2 | 2 | 3 | 2 | 2 | 2 | 3 |
| CLO3 | 2 | 3 | 2 | 2 | 2 | 3 | 3 | 2 | 2 | 3 | 3 | 2 |
| CLO4 | 2 | 3 | 3 | 3 | 3 | 2 | 2 | 3 | 3 | 2 | 3 | 3 |
| CL[illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | 3 |

S[illegible]

// தமிழ்ப் பேராசிரியர் முனைவர் பாப்பாவின் பதிவு.
இன்று எங்கள் கல்லூரியில் பாடத்திட்டங்களுக்கான குழுக்கூட்டம் (Academic board) நடந்தது. இப்பொழுது தமிழ்நாடு அரசு அனைத்து பள்ளிகளுக்கும் ஒரே பாடத்திட்டம் (சமச்சீர்க் கல்வி) என்பதைப் போல அனைத்துக் கல்லூரிகளுக்கும் ஒரே மாதிரியான பாடத்திட்டம் என்பதை இந்த வருடத்திலிருந்து நடைமுறைக்குக் கொண்டு வருகிறது. பாடத்திட்டத்தில் யாருக்கு எந்தப் பாடத்தைக் கொடுப்பது இப்படி எல்லாம் நிறைய குழப்பங்கள் – எதையுமே துவங்கும் பொழுது சில குழப்பங்கள் இருக்கத்தானே செய்யும் அதைப்போல. நாங்கள் குறிப்பாக நான் இன்று தான் அந்தப் பாடத்திட்டத்தைப் பார்த்தேன். என் பக்கத்தில் இறைவாணியும் இருந்தார். ஒவ்வொரு பாடத்திற்கும் முடிவில் பார்வை நூல்கள், பாட , இணையதள முகவரிகள் நிறைய கொடுக்கப்பட்டிருந்தன. பெரும்பான்மையான பாடங்களின் முடிவில் கொடுக்கப்பட்டிருந்த இணையதள முகவரியில் முதலில் இருந்தது நமது Thf இணையதளம்தான். எங்கள் இருவருக்கும் மகிழ்ச்சியும் சந்தேகமும். நம்முடையது தானா என்று வேகமாக அந்த இணையதள முகவரியைக் கூகுளில் பார்த்தோம். நம்முடைய இணையதள முகவரிதான். இருவருக்கும் அந்த நேரத்தில் மிகுதியான மகிழ்ச்சி. தமிழ் மரபு அறக்கட்டளை இணையதள முகவரி என்பதில் இன்னும் சந்தோஷமாக இருந்தது.//

## மரபுப் பயணம் — சென்னை விவேகானந்தர் இல்லம், சாந்தோம் தேவாலயம்
## ஏப்ரல் 16, 2023

ஏப்ரல் 16, 2023நேரம்: காலை 9:30க்கு
1. சென்னை விவேகானந்தர் இல்லம்,




2. சாந்தோம் தேவாலயம் மரபுப் பயணம்




ஆகிய இடங்களுக்கு மரபுப் பயணம் மேற்கொள்ளப் பட்டது - காணொளி: https://youtu.be/Cd6z7Ac1sBo

மரபுப்பயணம் — "உசிலம்பட்டி உசிலம்பட்டி பகுதியில் தொல்குடி மரபணு குடும்பத்தினருடன் ஆய்வாளர்கள் சந்திப்பு"
ஏப்ரல் 28, 2023



"உசிலம்பட்டி பகுதியில் தொல்குடி மரபணு குடும்பத்தினருடன் ஆய்வாளர்கள் சந்திப்பு"

உசிலம்பட்டி பகுதியில் தொல்லியல் சார்ந்த இடங்களில் ஆய்வு மேற்கொண்ட தமிழ் மரபு அறக்கட்டளை நிர்வாகிகள், தொல்குடி மரபணு கொண்ட ஜோதிமாணிக்கம் விருமாண்டி குடும்பத்தினரைச் சந்தித்துப் பேசினர்.

உசிலம்பட்டி பகுதியில் 3000 ஆண்டுகளாக மக்கள் தொடர்ந்து வாழ்ந்து வருவதற்கான தொல்லியல் எச்சங்கள் கிடைக்கின்றன. மனித நாகரீகம்

துவங்கிய காலத்தில் ஆப்ரிக்க கண்டத்தில் இருந்த மரபணுவை ஒத்த விருமாண்டி குடும்பத்தினர் ஜோதிமாணிக்கம் கிராமத்தில் உள்ளனர். அவர்களை ஆய்வாளர்கள் சந்தித்தனர்.

ஆஸ்திரேலிய பழங்குடிகள் பயன்படுத்தும் வளரி (பூமாராங்) ஆயுதத்தை, இப்பகுதியின் கருமாத்தூர் மக்கள் கோயிலாங்குளம் பட்டசாமி கோயிலில் காணிக்கையாக அளித்து வழிபடுகின்றனர். அதனை ஆய்வு செய்த ஆய்வாளர்கள், கி.பி., 9ம் நூற்றாண்டு முதல் 14 ஆம் நூற்றாண்டு வரையான கல்வெட்டுகளைக் கொண்ட ஆனையூர் மீனாட்சியம்மன் ஐராவதேசுவரர் கோயில், வகுரணி சந்தைப்பட்டி மூன்றுமலைப்பகுதி புலிப்பொடவு குகைக்குள் 3000 ஆண்டுகள் பழமையான பாறை ஓவியங்களைப் பார்வையிட்டனர்.

அய்யப்பன் எம்.எல்.ஏ., அறக்கட்டளை தலைவர் சுபாஷிணி, மரபணு ஆய்வாளர் பிச்சப்பன், பெருங்காமநல்லூர் மாயக்காள் அறக்கட்டளை தலைவர் செல்வபிரீத்தா, கண்ணன், பேராசிரியர்கள் பாப்பா, இறைவாணி, எழுத்தோவியர் நாணா, ஆசிரியர்கள் பாமா, சேகர், தட்சிணாமூர்த்தி ஆய்வில் பங்கேற்றனர்.

இந்தப்பகுதியில் விரிவான தொல்லியல் ஆய்வுகள் மேற்கொள்ள வேண்டும் என, தமிழக அரசிடம் வலியுறுத்துவோம். பொது மக்களும் தங்கள் பகுதியில் காணப்படும் தொல்லியல் சான்றுகளைப் பாதுகாக்கவும், ஆவணப்படுத்தவும் முன்வர வேண்டும் என, வேண்டுகோள் விடுத்தனர்.

தினமலர் செய்தி –
https://m.dinamalar.com/detail-amp.php?id=3307286




இந்தியாவின் முதல் மனிதன் தமிழன் விருமாண்டி செர்மன்குழு பெருமிதம்
தமிழ் ஒளி தொலைக்காட்சி -
https://youtu.be/CcXwClOZwts









## மரபுப்பயணம் — கீழடி அருங்காட்சியகம்
ஏப்ரல் 29, 2023




கீழடி அருங்காட்சியகத்திற்கு ஏப்ரல் 29, 2023 அன்று தமிழ் மரபு அறக்கட்டளை குழுவினர் மரபுப் பயணம் மேற்கொண்டனர்.

### கீழடி அருங்காட்சியகம் ஒரு பிரம்மாண்டம்!!!

தமிழகத்தில் பல்வேறு இடங்களில் அகழ்வாய்வுகள் நடத்தப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக கொடுமணல், ஆதிச்சநல்லூர், பூம்புகார், கொற்கை, அழகன் குளம் போன்றவை. இப்பகுதிகளிலும் கீழடி அருங்காட்சியகம் போல 'சைட் மியூசியம்' என்று சொல்லப்படுகின்ற 'அகழ் வைப்பக அருங்காட்சியகங்கள்' உருவாக்கப்பட வேண்டும். அதற்கு கீழடி அருங்காட்சியகம் ஒரு சிறந்ததொரு எடுத்துக்காட்டாக, முன் உதாரணமாக அமைகிறது என்றே நான் கருதுகிறேன்.இந்த அருங்காட்சியகத்தை உருவாக்கிய தமிழக அரசு

மற்றும் தமிழக தொல்லியல் துறைக்கு எனது நெஞ்சார்ந்த பாராட்டுக்கள்.











முனைவர் க. சுபாஷிணி
தலைவர், தமிழ் மரபு அறக்கட்டளை
29.4.2023

தமிழ் மரபு அறக்கட்டளை காணொளி வெளியீடு
தொல்புரம் கலாலயம் நாடக மன்றம்
காணொளி: https://youtu.be/z4EamFAM3qY




யாழில் முத்தமிழ் விழா: மே 21, 2023

யாழில் முத்தமிழ் விழா: மே 21, 2023 அன்று யாழ்ப்பாணப் பெட்டகம் நிழலுருக் கலைக்கூடம் அமைப்பின் ஏற்பாட்டில் உலக பண்பாட்டுத் தினத்தினை முன்னிட்டு முப்பெருந்தமிழ்விழா இடம்பெற்றது. யாழ்ப்பாணம் இந்துக்கல்லூரியின் சபாலிங்கம் அரங்கில் யாழ் பல்கலைக்கழக முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் எஸ்.சிவலிங்கராஜா தலைமையில் இந்த முப்பெருந்தமிழ்விழா இடம்பெற்றது. நிகழ்ச்சியில் தொல்புரம் கலாலயம் நாடக மன்றம் குழுவினரின் நாடகம் ஒன்றும் நடைபெற்றது.

நிகழ்ச்சியின் சிறப்பு விருந்தினராக தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் தலைவர் முனைவர் க.சுபாஷிணி அவர்களுடன் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் பொறுப்பாளர்களான முனைவர் மு.இறைவாணி, முனைவர் மு.பாமா ஆகியோரும் கலந்துகொண்டனர். இவர்கள் இருவரும் தொல்புரம் கலாலயம் நாடக மன்றம் குழுவினரிடம் நிகழ்த்திய நேர்காணல் இக்காணொளியில் இடம் பெறுகிறது.

**தொல்புரம் கலாலயம் நாடக மன்றம்**
**காணொளி:** https://youtu.be/z4EamFAM3qY

அனைவருக்கும் வணக்கம்.

தொல்புரம் கலாலயம் நாடக மன்றம் நடத்திய 'தாய் கண்ட சேய்' இசை நாடகத்தின் விமர்சனம்:
யாழ்ப்பாணத்தில் நடைபெற்ற முப்பெரும் தமிழ் விழா 2023-வில் திரு உதயச்சந்திரன் குழுவினர் இயக்கிய தாய் கண்ட சேய் இசை நாடகத்தை மே 21, 2023 அன்று மாலையில் காணும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. இந்த முப்பெரும் விழாவில் கலந்து கொள்ளும் வாய்ப்பு திரு அருள்சந்திரன் மற்றும் முனைவர் சுபாஷிணி அவர்களால் எனக்குக் கிடைத்தது

வெகு காலம் ஆகிவிட்டது இசை நாடகத்தைக் கண்டு. மதுரையில் திருவிழாக்களில் கண்டதாக நினைவு... சென்னைக்கு வந்து 18 வருடங்களான பின்

யாழ்ப்பாணத்தில் இத்தகைய ஒரு நாடகத்தைக் காணும் வாய்ப்பு கிடைத்ததை எண்ணி மகிழ்கிறேன்.

இந்த நாடகத்தில் மகாபாரதத்தின் மூன்று காட்சிகள் அரங்கேற்றப்பட்டன. கர்ணன் தனது தாயைப் பற்றித் தெரியாமல் எப்படித் தவிக்கிறார், கிருஷ்ணன் மூலம் எப்படித் தெரிந்து கொள்கிறார், குந்திதேவியிடம் கர்ணன் தான் நீ பெற்றெடுத்த முதல் குழந்தை என்னும் உண்மையைக் கூறி, குந்தி தேவியார் தான் பெற்ற பாண்டவர்களைக் காப்பாற்ற என்ன வரங்கள் கர்ணனிடம் பெற வேண்டும் என்று கிருஷ்ணன் அறிவுரை கூறும் காட்சியையும், குந்தி தேவியும் கர்ணனும் சந்திக்கும் நிகழ்வும் காட்சி அமைக்கப்பட்டது.

கர்ணன் வேடத்தில் திரு உதயச்சந்திரன் அவர்கள் நடித்திருந்தார். நாடகக் குழுவினர் பயன்படுத்திய உடைகள் அலங்காரங்கள் வசனங்கள் எல்லாம் அற்புதம். நடிகர் திலகம் சிவாஜி கணேசன் அவர்கள் நடித்த கர்ணன் திரைப்படம் கண்முன்னே வந்து நின்றது. உதயச்சந்திரன் அண்ணன் அவர்களும் நவாலியின் சிவாஜியாகவே எங்களுக்குக் காட்சியளித்தார். கிருஷ்ணனின் கதாபாத்திரத்தில் என்டி ராமராவ் போலவே மா. நித்தியாந்தன் அண்ணன் நடித்திருந்தார். வசனங்களைக் கூறுவதில் ஒருவருக்கு ஒருவர் சலித்தவர் இல்லை என்று நமது சிவாஜியும் என்டி ராமராவும் போட்டிப் போட்டுக் கொண்டனர். இதற்கு இடையில் குந்தி கதாபாத்திரமாக நடித்த த.ரவீந்திரன் அண்ணன் குந்தியாகவே மாறிவிட்டார். ஒரு தாய்க்கு இருக்கும் பாசப் போராட்டத்தைத் தத்ரூபமாக நடித்துக்

காட்டினார். இவர்கள் மூவரும் மேடையிலேயே வசனம் பேசினார்கள், பாடினார்கள், நடிப்பில் அனைவரையும் கவர்ந்து கட்டிப்போட்டு வைத்திருந்தார்கள்.



இந்தக் குழுவினர் 2011 ஆம் ஆண்டு முதல் இயங்கி வருகிறார்கள். வருடம் தோறும் ஒரு இதிகாச நாடகத்தினை தயாரித்து இயக்கி பொன்னாலை ஸ்ரீ வரதராஜ பெருமாள் கோவில் பதினாறாம் நாள் திருவிழாவில் அரங்கேற்றுகிறார்கள். சமூக விழிப்புணர்வு சார்ந்த நாடகங்களையும் நடத்தி வருகிறார்கள். இவர்களின் நாடகக் கலை மேன்மேலும் வளர என்னுடைய வாழ்த்துக்கள், இவர்கள் அனைவரும் நல்ல உடல் ஆரோக்கியத்தோடும் மகிழ்வோடும் இருக்க வேண்டும் என ஆசை கொள்கிறேன்.

முனைவர் மு. பாமா
தமிழ் மரபு அறக்கட்டளை

*****




"மலேசியப் பழங்குடி மக்களின் வாழ்வும் பண்பாடும்"
— முனைவர். க.சுபாஷிணி
தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு – திசைக்கூடல் – 325 [ஏப்ரல் 1, 2023]
https://youtu.be/Ohce_QC_9Pk




"மதுரை நடுகற்கள்"
— முனைவர். ப. தேவி அறிவுசெல்வம்
தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு – திசைக்கூடல் – 326 [ஏப்ரல் 8, 2023]
https://youtu.be/qeRktbeN54E




"உணவோடு உரையாடு"
— அக்கு ஹீலர்.அ.உமர் பாரூக்
தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு –
திசைக்கூடல் – 327 [ஏப்ரல் 15, 2023]
https://youtu.be/KoCp2EIndcM




"அரிக்கமேடு அகழ்வாராய்ச்சி"
— முனைவர் எம். பி. இராமன்
தமிழ் மரபு அறக்கட்டளை கடிகை பிரிவு வழங்கிய -
உலக மரபு நாள் 2023 சிறப்பு நிகழ்ச்சி
திசைக்கூடல் – 328 [ஏப்ரல் 18, 2023]
https://youtu.be/rZnAXFbf69A



"சினிமாவில் தாய் பிம்பம்"
— தோழர் பா. ஜீவசுந்தரி
வையத் தலைமை கொள் பிரிவு வழங்கிய –
திரைக்கூடல் – 329 [ஏப்ரல் 22, 2023]
https://youtu.be/9b1CEGC8mx8



"மார்க்சும் மார்க்சியமும்"
— அ. கா. ஈஸ்வரன்
தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு –
திரைக்கூடல் – 330 [மே 06, 2023]
https://youtu.be/9RLNh_COH4s




"அருங்காட்சியகங்கள் நிலைத்தன்மை மற்றும் நல்வாழ்வு"
— முனைவர்.சுபாஷிணி
அருங்காட்சியகப் பிரிவு வழங்கிய –
அருங்காட்சியகநாள் 2023 சிறப்பு நிகழ்ச்சி
திசைக்கூடல் – 331 [மே 18, 2023]
https://youtu.be/8pr5KxKT3Us




"அரசியல் – பெண் – இந்தியப்பயணம்"
— திருமிகு. கிருத்திகாதரன்
வையத் தலைமை கொள் பிரிவு வழங்கிய –
திசைக்கூடல் – 332 [மே 27, 2023]
https://youtu.be/CzeeON6Sits




"திருவள்ளுவர் யார்?"- நூல் திறனாய்வு
— திருமிகு. பானுரேகா
தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு –
திசைக்கூடல் – 333 [மே 28, 2023]
https://youtu.be/kidhY8meu-c




"ரிக் வேத சமூகம் ஒரு பார்வை"
— திரு.சுந்தர சோழன்
தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு –
திசைக்கூடல் – 334 [ஜூன் 11, 2023]
https://youtu.be/xDpdn5-IZD0




"கிழக்குத் தொடர்ச்சி மலையும் யானைகளின் வழித்தடங்களும்"
— திரு. ஆற்றல் பிரவீண் குமார்
தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு – திசைக்கூடல் – 335 [ஜூன் 24, 2023]
https://youtu.be/6QzkjfkGyPc

****




தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் 2023 நிகழ்வுகள் அட்டவணை:
https://docs.google.com/spreadsheets/d/1EICs-TZxpvucYng6kjd7ZLYG6C1EI60D/edit#gid=1528367973

****




பழந்தமிழர் நாகரிகச் சின்னம் – அரிக்கமேடு;
முனைவர் சு. தில்லைவனம்
ஏப்ரல் 14, 2023

தமிழ் மரபு அறக்கட்டளை மின்னூலகத்தின் நூல்கள் வரிசையில் முனைவர் சு. தில்லைவனம் அவர்களின் 'பழந்தமிழர் நாகரிகச் சின்னம் – அரிக்கமேடு' (2008) நூல் இன்று இணைகிறது.

பண்டைத் தமிழர் வணிகம், அரிக்கமேடு அகழாய்வு வழங்கிய தொல்லியல் பொருட்கள் குறித்து விரிவாக விளக்கும் நூல் இது.

நூல்:
பழந்தமிழர் நாகரிகச் சின்னம் – அரிக்கமேடு
முனைவர் சு. தில்லைவனம்
சிவசக்திப் பதிப்பகம், 2008.

Pazhanthamizhar Nagariga Chinnam Arikamedu, 2008 – Dr.Thillaivanam
http://thf-news.tamilheritage.org/wp-content/uploads/2023/04/Arikamedu_THFi.pdf

மின்னூலாக்கம் உதவி:
இந்த நூலை மின்னாக்கம் செய்து உதவியவர்நமது செயற்குழு உறுப்பினர்
முனைவர் சிவ இளங்கோ அவர்கள்
அவருக்கு நமது நன்றி.

நன்றி.

முனைவர் தேமொழி
செயலாளர்
தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு
ஏப்ரல் 14, 2023

## நூல் வெளியீடு




**தமிழ் மரபு அறக்கட்டளை நூல்கள்:**
https://academy.tamilheritage.org/2022/05/28/1875/

**தமிழ் மரபு அறக்கட்டளையின் புதிய வெளியீடுகள்:**

1. வரலாற்று ஆய்வில் களப்பணிகள்
முனைவர் க. சுபாஷினி
விலை: ₹120
வகை: வரலாறு, தொல்லியல்

2. தமிழகத்தில் பௌத்தம்
முனைவர் தேமொழி
விலை: ₹120
வகை: பௌத்தம், தமிழ்நாடு

3. இராஜேந்திர சோழனின் ஒட்ர நாடு வெற்றி
முனைவர் ஜெ. ஆர். சிவராமகிருஷ்ணன்
விலை: ₹90
வகை: வரலாறு, போர், தமிழ்நாடு

4. நிலவியல் நோக்கில் கங்கை கொண்ட சோழபுரம் வரலாறு
முனைவர் ஜெ. ஆர். சிவராமகிருஷ்ணன்
விலை: ₹300
வகை: வரலாறு, தொல்லியல், தமிழ்நாடு

*****

நூல்களை சென்னையில் கீழ்க்காணும் இடங்களில் நேரில் வாங்கலாம் . . .

- டிஸ்கவரி புக் பேலஸ்
- ஆழி பதிப்பகம்
- எமரால்ட் பதிப்பகம்

**நூல்களை இணையம் வழியாக கீழ்க்காணும் தளங்களில் பெறலாம்:**

https://www.commonfolks.in/books/tamil-heritage-foundation



தமிழகத்தில் பௌத்தம்



வரலாற்று ஆய்வில் களப்பணிகள்



இராஜேந்திர சோழனின் ஒட்ர நாடு வெற்றி



நிலவியல் நோக்கில் கங்கை கொண்ட சோழபுரம் வரலாறு

https://wisdomkart.in/books-publication/tamil-heritage-foundation/

தமிழ் மரபு அறக்கட்டளையின் பதிப்பக நூல்கள்

| எண் | தலைப்பு | ஆசிரியர் | வெளியீடு | விலை ரூபாய் |
|---|---|---|---|---|
| 1 | திருவள்ளுவர் யார் | கௌதம சன்னா | டிசம்பர் 2021 | 200 |
| 2 | நாகர் நிலச் சுவடுகள் | மலர்விழி | பிப்ரவரி 2022 | 100 |
| 3 | அறியப்பட வேண்டிய தமிழகம் | க.சுபாஷிணி | பிப்ரவரி 2021 | 80 |
| 4 | வரலாற்றில் பொய்கள் | தேமொழி | டிசம்பர் 2021 | 100 |
| 5 | கொங்கு நாட்டு கல்வெட்டுக்கள் | துரை சுந்தரம் | டிசம்பர் 2021 | 160 |
| 6 | கொங்கு நாட்டுத் தொல்லியல் சின்னங்கள் | துரை சுந்தரம் | டிசம்பர் 2021 | 160 |
| 7 | தமிழ்நாட்டுக் கடவுளும் வழிபாட்டு மரபுகளும் | கோ.சசிகலா | டிசம்பர் 2021 | 180 |
| 8 | விளையாடிய தமிழ்ச் சமூகம் | ஆ.பாப்பா | பிப்ரவரி 2022 | 300 |
| 9 | கல்வெட்டில் தேவதாசி | சாந்தினிபீ | பிப்ரவரி 2022 | 150 |
| 10 | ராஜராஜனின் கொடை | க.சுபாஷிணி | பிப்ரவரி 2022 | 180 |
| 11 | இலக்கிய மீளாய்வு (ஆய்வுக் கட்டுரைகள்) | தேமொழி | ஜனவரி 2023 | 150 |
| 12 | கணிதவியல் பொதுக்கட்டுரைகள் | ப.பாண்டியராஜா | ஜனவரி 2023 | 180 |
| 13 | வரலாற்று ஆய்வுகளில் களப்பணிகள் | க.சுபாஷிணி | மே 2023 | 120 |
| 14 | தமிழகத்தில் பௌத்தம் | தேமொழி | மே 2023 | 120 |
| 15 | நிலவியல் நோக்கில் கங்கைகொண்ட சோழபுரம் | ஜெ.ஆர்.சிவராமகிருஷ்ணன் | மே 2023 | 300 |
| 16 | இராஜேந்திர சோழனின் ஒட்ர நாடு வெற்றி | ஜெ.ஆர்.சிவராமகிருஷ்ணன் | மே 2023 | 90 |

## “தமிழகத்தில் பெளத்தம்” நூல் வெளியீடு

தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகத்தின் புதிய வெளியீடான “தமிழகத்தில் பெளத்தம்” என்ற நூல் (நூலாசிரியர் முனைவர் தேமொழி, செயலாளர், தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு) சேலம் மாவட்டம் தலைவாசல் அருகே தியாகனூரில் மே 14, 2023 அன்று நடைபெற்ற தமிழ்நாடு பெளத்தர்கள் சங்கப் பேரவையின் பெளத்த எழுச்சி மாநாட்டில் நாடாளுமன்ற உறுப்பினர் மாண்புமிகு டாக்டர் தொல்.திருமாவளவன் அவர்களால் வெளியிடப்பட்டது.









★★ மாலைமுரசு 16-5-2023 5



சேலம் தமிழ்நாடு பவுத்தர்கள் சங்க பேரவை மறுமலர்ச்சி மாநாட்டில் விடுதலை சிறுத்தை கட்சி தலைவர் தொல். திருமாவளன், எம்.பி., பேசினார். இதில் மகாசங்க ஒருங்கிணைப்பாளர் கவுதம சன்னா, பிக்கு தம்மசீலர், மகா சங்க பொருளாளர் கோவி. பார்த்திபன் உள்ளிட்ட பலர் கலந்து கொண்டனர்.

தமிழகத்தில் பௌத்தம் — நூல் திறனாய்வு




தேமொழி எழுதிய தமிழகத்தில் பௌத்தம் நூலின் திறனாய்வு உரை முனைவர் க. சுபாஷிணி அவர்களால் மே 28, 2023 அன்று சென்னை புக் ஹவுஸ் ஏற்பாட்டில் நிகழ்த்தப்பட்டது.

காணொளி: தமிழகத்தில் பௌத்தம் நூல் திறனாய்வு - முனைவர் க. சுபாஷிணி

https://www.youtube.com/live/P9BvdRzjTZU?feature=share&t=132



